சென்னைக் கந்தகோட்ட கந்தபெருமான்

# இதழ் அகல் அந்தாதி




அருள்மிகு தண்டபாணி சுவாமிகள் அருளியது



ஸ்ரீ கந்தசுவாமி
(மூலவர்)



தவத்திரு வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் பாடிய

# சென்னைக் கந்தகோட்ட கந்தபெருமான் இதழ்அகல் அந்தாதி

சோழவந்தான் தவத்திரு கந்தசாமி அடிகள்
அருளிய அரும்பதவுரையை அடியொற்றி
அருட்கவி அரங்க சீனிவாசன்
இயற்றிய விளக்கவுரை




ஸ்ரீகந்தசுவாமி கோயிலென வழங்கும்
ஸ்ரீமுத்துக்குமாரசுவாமி தேவஸ்தானம்

44, இராசப்பச் செட்டி தெரு,
பூங்காநகர், சென்னை - 600 003.
☎ : 5352192

# பதிப்புரை

திருவோங்கு சென்னைத் தலைநகர்ப் பூங்கா நகரில் சிறந்தோங்கி விளங்கும் கோட்டம், "கந்தசாமி கோவில்" என வழங்கும் கந்தகோட்டம்; அருள்மிகு முத்துக்குமரன் உறையும் அருட்கோட்டம்; நம் கந்த கோட்ட முருகனைப் பற்றிப் பாடிய அருளாளர் பலர்; அவர்களுள் சிதம்பரம் இராமலிங்க அடிகள் என வழங்கும் வள்ளற் பெருமான், தவத்திரு பாம்பன் சுவாமிகள் திருப்புகழ் வண்ணச் சரபம் தவத்திரு தண்டபாணி அடிகள் முதலாயவர் குறிப்பிடத்தக்கவர்.

நம் கந்த கோட்டத்தில் நடைபெறும் கந்தசஷ்டி கோடி அர்ச்சனைப் பெருவிழாச் சிறப்பு உலகளாவி நிற்பது வெள்ளிடை மலை; ஆண்டுக்காண்டு அர்ச்சனை செய்து கந்தனின் திருவருள் பெறும் பக்தர் எண்ணிக்கை பெருகுவதே நம் கந்த கோட்டத்தின் தனிச் சிறப்பு.

சென்ற பல வாண்டுகளாய் வள்ளற் பெருமானின் தெய்வமணி மாலையினை நூலாக்கிப் பக்தர்களுக்கு வழங்கியது போல் இவ்வாண்டு தவத்திரு வண்ணச் சரபம் தண்டபாணி அடிகளின் இதழ் அகல் அந்தாதி என்ற இவ்வரிய நூலை வழங்குவதிற் பெருமை யடைகின்றோம்; அடிகள் இயற்றிய நூல்களுள் இன்று வரை அச்சேறாதவை எண்ணில அந்தாதி நூல்களும் ஐந்துள; அவற்றுள் ஒன்றாய இதழ் அகல் அந்தாதி இன்று அச்சு வாகனத் தேறி பவனி வருகிறது.

ஐந்தாண்டுகளுக்கு முன்பு தவத்திரு தண்டபாணி அடிகளின் பெயரர் தவத்திரு சோழவந்தான் கந்தசாமி அடிகளார் எம்மிடம் வந்தார். திரிபந்தாதி, பதிற்றுப்பத்தாந்தாதி, வெண்பா அந்தாதி; ஆங்கிலியர் அந்தாதி, இதழகல் அந்தாதி நூல் ஐந்தன் மூலப்படியினைத் தந்தார்; சிதைவுறும் வகையில் இருந்த அப்படிகளைக் கந்த கோட்ட வெளியீடாக வெளியிட்டருள வேண்டிக் கொண்டார். அவற்றை நம் திருக்கோவில் ஸ்ரீ முத்துக் குமாரசாமி தேவஸ்தான இந்து மேனிலைப் பள்ளித் தலைமை ஆசிரியர் நற்றமிழ்க்கவிஞர் நு.ர. ஆறுமுகம் அவர்களிடம் தந்து தக்கவுரை எழுதித்தரும் படிக்கேட்டுக் கொண்டேன் அவர் தமிழவேள் பேராசிரியர் இராம. சுப்பிரமணியன் உதவியோடு, அருட்கவி சீனிவாசன் விளக்கவுரையொடு சிதைவுற்றிருந்த மூலம்படிக்கு உயிர்தந்தார்; மூலப்படி தந்த சோழ வந்தான் கந்தசாமி அடிகளும், உரை எழுதித் தந்த அருட்கவி அரங்க சீனிவாசனும் இன்று நம்மிடையே இல்லை; அமரராகி விட்டனர்,

இதழ் அகல் அந்தாதி மிகக் கடினமான மடக்கணிப் பாடல்; அதனை அருட்கவி அவர்கள், கந்தசாமி அடிகளாரின் அரும் பதவுரையை அடியொற்றித் தெளிந்த பதவுரையும் அரிய இலக்கண விளக்கமொடு, புராண வரலாற்றுக் குறிப்புகளும் தந்துள்ளார்; பாடலைப் பொருளுணர்ந்து கொள்ளும் வகையில் அமைந்துள்ளது; இதனைத் தொடர்ந்து எஞ்சியுள்ள நான்கு அந்தாதி நூல்களையும் வெளியிட இருக்கின்றோம் என்பதை மகிழ்ச்சியொடு தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வந்தாதி நூலுக்கினிய உரைகண்ட அமரர் அருட்கவி அரங்க சீனிவாசன் அவர்களுக்கும், இலக்கணச் செம்மல் பேராசிரியர் இராம. சுப்பிரமணியன் அவர்களுக்கும், எங்கள் பள்ளித்தலைமை யாசிரியர் நற்றமிழ்க் கவிஞர், நல்லாசிரியர் நு.ர. ஆறுமுகம் அவர்களுக்கும், நூலினை நன்கு அச்சிட்டுத்தந்த ஸ்ரீ கணேஷ் அச்சகத்தார்க்கும் எங்கள் உளமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

பல்கலைக் கழகத் தமிழ்ப் பட்ட மேற்படிப்பு பயில்வோருக்கும் பாடமாக வைக்கும் வகையில் நூல் அமைந்துள்ளது; தமிழாயும் அறிஞர்க்கும், கவிஞர்க்கும், சுவைஞர்க்கும் இந்நூல் பெரிதும் பயன்படும்; அருளாளர்களும், ஆன்மநேயத் திருவாளர்களும், அடியார்களும் இந்நூலைக் கற்றுத் தெளிந்து கந்தன் திருவருள் பெற வேண்டுகிறேன்.

நடைபெறும் கந்த சஷ்டிக் கோடி அர்ச்சனைப் பெருவிழாவில் வெளியிடுவதோடு, அருட்பிரசாதமாய் 35 ஆயிரம் படிகளை பக்தர்களுக்கு அன்பளிப்பாய் வழங்கி மகிழ்கின்றோம்.

இவ்வரிய இதழ் அகல் அந்தாதி மலரை எல்லாம் வல்ல கந்த பெருமான் திருவடிகளுக்குக் காணிக்கை யாக்குகின்றோம்.

வளர்க சமயம்! ஓங்குக கந்தன் புகழ்! வாழ்க தமிழர் நெறி.

சென்னை
19.10.1999

அன்புடன்
பி. பாலசுப்பிரமணியம், பி.எஸ்சி.
முதன்மை அறங்காவலர்
ஜி. ஏகாம்பரம் செட்டியார்
சி. ஆர். பழநிதாசு
டி.எல்.டி. ஏழுமலை
அறங்காவலர்கள்

# முன்னுரை

திருப்புகழ் வண்ணச் சரபம் தவத்திரு தண்டபாணி அடிகளை அறியாதார் அறியாதாரே !

மகா வித்துவான் திரிசிரபுரம் மீனாட்சி சுந்தரம் பிள்ளை யவர்கள், வடலூர் அருட்பிரகாச வள்ளலார் முதலாய பேரருளாளர்களின் ஒத்த காலத்தவர் அவர்; அவர், ஓர் இலக்கம் பாடல்கள் எழுதினார் என்று கூறப்படுகின்றது; அவற்றுள் பாதி அழிந்து விட்டது; மறுபாதியிலும் இது காறும் அச்சானது சிறுபகுதியே யாகும்.

இன்னும் பல்லாயிரம் பாடல்கள் வெளிவர வேண்டியுள்ளன:-

திருப்புகழ் (பல்லாயிரம்), பிள்ளைத் தமிழ்கள், புலவர் புராணம், திரு ஆமாத்தூர்ப் புராணம், தில்லைத் திருவாயிரம், பழனித் திருவாயிரம், ஞாயிறு ஆயிரம், கணபதி ஆயிரம், திருமால் ஆயிரம், ஏகபாத அந்தாதிகள், கலம்பகங்கள், மடக்கு, திரிபு அந்தாதிகள், குருபாத தத்துவம், தியானானுபூதி முதலாய தத்துவ நூல்கள், தமிழலங்காரம் முதலாய அலங்காரங்கள், சதகத் தந்தாதி, பதிற்றுப் பத்தந்தாதி, ஆங்கிலியரந்தாதி, சதகங்கள், வெண்பா அந்தாதி, ஏழாயிரம் பிரபந்தம்.

இவ்வாறே அடிகளாரின் படைப்புப் பட்டியல் நீண்டு செல்லும். இவை யாவற்றிலும் சொல்லணிகளும் பொருள் அணிகளும் தமிழுக்கு அணிகலன்களாக அடிகள் சூட்டியுள்ளதைக் காணலாம்.

தமிழ் வளர்க்க வேண்டும் என்று கூக்குரலிடுவோர் பெருகிய காலம் இது; ஆனால் நடைமுறையில் தமிழ்க் கொலைதான் நடைபெறுவதைக் காண்கின்றோம்.

தமிழில் தோன்றியுள்ள செவ்விய பாடல்களைப் படித்துப் பொருள் உணர்வார் முற்றுமாக அருகி வருகின்றனர், அதற்காக யாரும் வருந்து வதும் இல்லை; பிற மொழிகளின் வளர்ச்சி கண்டும், தமிழ் வளர்க்க முயல்வார் ஓரிருவரைக் கூடக் காண இயலவில்லை; தமிழ் ஆராய்ச்சி என்ற ஈடுபாட்டினால் தமிழ்ச் சுவை விரும்புவார் இல்லை. உலகப் பொது மறை குறள் என்று முழங்கு வோரும் திருக்குறளை ஆழ்ந்து கற்பதில்லை; கற்ற வழி நிற்பதில்லை;

தமிழ் இலக்கண மரபையே புறக்கணித்து விட்டு நன்னூல் தொல்காப்பியங்களில் நுனிப்புல் மேய்வாரே பெருகிவிட்டனர்; இந்நிலையில் தண்டபாணி அடிகள் போன்ற அருளாளர்கள் அருளிய செம்பாகச் செய்யுள்கள் கூடப் புறக்கணிக்கப் படுவது வியப்புக்குரிய தன்று : இந்நிலை நீடித்தால் நம் முன்னோர் நமக்காகத் தேடிக் குவித்த தமிழ்ச் செல்வ மெல்லாம் இழந்து விடுவோம்; இழந்தோமே என்ற ஏக்கமும் இன்றித் தூக்கம் கொண்டு விடுவோம். தூக்கத்தில் தகரத்தை அடித்தாலும் இலக்கணம் மறந்து போயினமையால் ஊக்கம் பிறக்க வழியில்லை; தூக்கத்தில் தகரம்

அடிப்பது என்பது, 'தூ' என்ற உயிர்மெய்யில் உள்ள ஒற்றை நீக்கிவிடுவது; (த்+ஊ), நீக்கினால் 'ஊக்கம்' என்று ஆகும்; தகரம் அடிக்கக் கூட இலக்கணம் தெரிய வேண்டுமே !

தண்டபாணி அடிகள் தமிழ் வளர்க்கச் செய்த பலவகைப் பிரபந்தங்களில் மிகமிக அதிசயமான பிரபந்தம் இதழ் அகல் அந்தாதி எனலாம்; இது தமிழ்க்குச் சூட்டிய சொல்லணி மகுடம்:

நாம் உச்சரிக்கும்போது சில எழுத்துகள் இதழ் ஒட்டாமலும் அசையாமலும் பிறக்கும்; சில எழுத்துகள் இதழ் ஒட்டி அசைந்து பிறக்கும்.

உயிர் எழுத்துகளில் உ, ஊ, ஒ, ஓ, ஔ என்ற ஐந்து எழுத்துகளும் அவை ஏறிய உயிர்மெய்களும், மெய் யெழுத்துகளில் 'ப' 'ம' 'வ' என்ற மூன்றும் அதன் இனமும் உச்சரிக்கும் போது இதழ் ஒட்டுவன; அவற்றை விலக்கினால், 247 தமிழ் எழுத்துகளில் மிஞ்சுவன (113) நூற்றுப் பதிமூன்று எழுத்துகளே! அந்த எழுத்துக்களை மட்டுமே பயன் படுத்திப் பாடுவது கடினம் என்பது சொல்ல வேண்டுவ தில்லை; அதிலும் மடக்கணியில் பாடுவது மிகக் கடினம்.

முற்காலத்தில் யமகண்டம் அமைத்து யார் எப்பொருள் தந்தாலும் உடனே பாடுவார்களாம்; பாடத் தவறினால் உயிரிழக்க நேரிடுமாம்.

'இதழகல் கவி' உயிரிழக்கும் அளவுக்குக் கடினமானது அன்று என்றாலும், பெரும்பாலோர் அதன் அருகே நெருங்காமல் விலகிச் செல்வதைக் காண்கின்றோம்.

இதழகல் அந்தாதி பாடுவது கடினம் என்பதால் தான், இவ்வகைக் கவி பாடியவர்களும் மிகச்சிலரே ! அவர்களுள் சிவப்பிரகாச சுவாமிகள் குறிப்பிடத்தக்கவர்; அவர் பாடிய நூல் நிரோஷ்ட யகம அந்தாதி எனப்பெயர் கொண்டது.

தண்டபாணி அடிகள் இவ்வகையில் பல்வேறு அந்தாதிகள் பாடியுள்ளார்; அவற்றுள் சில இப்போது அச்சு வாகனம் ஏறி உலா வரப்புறப்பட்டுள்ளது; மற்றவைக்கு இவ்வாய்ப்பு எப்போது கிட்டுமோ? அறியோம் !

தனித்தமிழில் எழுதவேண்டும்; பேச வேண்டும் என்ற முழக்கம் எங்கும் கேட்கின்றது; ஆனால் பிற மொழிக் கலப்பில்லாமல் எழுதுவாரும், பேசுவாரும் எத்துணை விழுக்காட்டினர்?

இதழகல் பாடல்கள் வடமொழியிலும் சில உள்ளன; அவை நிரோட்ட சுலோகங்கள் என்று பெயர் பெற்றுள்ளன.

'ஒட்டம்' என்றால் உதடு; நிர் ஒட்டம் என்றால் இதழ் அகன்றது என்று பொருள். சிவப்பிரகாச சுவாமிகள் கூடத் தம்படைப்புக்கு நிரோட்ட அந்தாதி என்றே பெயரிட்டனர்; வடமொழியில் ஓஷ்டம் என்றாள் உதடு என்று பெயர்.

தண்டபாணி அடிகள் நிரோட்டம் என்ற சொல்லில் இதழ் ஒட்டும் எழுத்து 'ம்' உள்ளது என்பதைக் கண்டார்; இதழ் ஒட்டாத பாட்டுக்கு இதழ் ஒட்டாத பெயர் இருத்தல் வேண்டும்; நிரோட்டம் என்பது வடசொல்; தமிழ்ப் பாடலுக்குத் தமிழ்ப் பெயர்தான் இருத்தல் வேண்டும் என்றும் கருதினார்; அதனால் 'இதழகலந்தாதி' என்று இதழ் ஒட்டாத பெயர் சூட்டினார், இப்பெயர் ஒன்றே அடிகளின் தனித்தமிழ் ஆர்வத்துக்கும் பிறமொழி கலப்பில்லாமல் தமிழ் வளர்க்க வேண்டும் என்ற விருப்பத்துக்கும் சான்றாகத் திகழ்வதைக் காணலாம். பாடல்கள் இதழ் ஒட்டாமலும், மடக்கணியிலும் இருப்பதால் நாரிகேர பாகமாகத்தான் தோன்றும்; ஆனால் சந்தி பிரித்து விட்டால் செம்பாகமாகிவிடும்; அவற்றுட் சில அருஞ்சொற்களுக்கு மட்டும் எளிய சொற்களில் விளக்கம் தந்து விட்டால் கதலிபாகமாக எளியபொருள் உள்ளதாக மாறிவிடும்.

சீட்டாட்டம், குதிரைப் பந்தயம், சதுரங்கம், திரைப்படம், தொலைக்காட்சி, வானொலி முதலாயவற்றில் எவ்வளவோ காலம் செலவிடுகிறோம்; அக்காலத்தில் பத்தில் ஒரு பங்கு இத்தகைய அரிய கவிதைகள் பயிலச் செலவிட்டால், நமக்கு வானோர் உலக இன்பம் இன்றே இங்கேயே, இப்போதே கிட்டும்; இது உறுதி.

முயன்றுதான் பாருங்களேன்! கிடைத்தால் வானமுதம்; இல்லையேல் கைவிட்டுப் போவது ஏதுமே இல்லை; நம் முன்னோர் தேடிய செல்வம் கடினமான பேழைக்குள் இருந்தால், பேழையைத் திறப்பது கடினம் என்பதற்காகத் திறக்காமல் விட்டுவிடுவோமோ? விடுவது மடமைதானே !

அடியேன் இதன் பொருள் காண்பதற்குப் பட்டபாடு கொஞ்சம் அன்று தண்டபாணி அடிகளின் திருவுள்ளக் கருத்தை உய்த்துணர்ந்து, அவர் நெஞ்சை என்னதாக்கிக் கொண்டு உரை காணத் தொடங்கினேன்; என்னே வியப்பு! உரை மிக மிக எளிதாக நெஞ்சில் பட்டது; தண்டபாணி அடிகளே என்நெஞ்சிலிருந்து உரைகண்ட முயற்சி என்னுடைய தன்று; எழுதியது மட்டுமே யான். ஆதலால் இதிலுள்ள நயங்களுக் கெல்லாம் உரியவர் அடிகளே! குறைகள் இருப்பின் அவை எனக்கே உரியன.

இவ்வுரை பதவுரை யாகும் : பாடலைத் தனித்தனிச் சொற்களாகச் சந்திபிரித்துக் கொண்டு, பொருள் தொடர்புக்காகவும், வினை முடிவுகளுக்காகவும் கொண்டு கூட்டிக் கொண்டு ஒவ்வொரு சொல்லுக்கும் பொருள் எழுதுவது பதவுரை எனப்படும்.

பதவுரைக்காகச் சொற்பிரித்துப் பொருள் உரைப்பது கண்ணிழித் துரைத்தல் எனப்படும். சந்தி பிரிப்பதனை வடமொழியாளர் அன்வயம் என்பர்.

சொற்களைத் தனித்தனியாகப் பிரிக்காமல் பாடலின் பொருள் முழுவதையும் ஒருங்கே திரட்டி உரைப்பதனைப் பிண்டமாகக் கொண்டுரைப்ப தென்பர். இதனை வடமொழியாளர் வார்த்திகம் என்று பெயர் சூட்டுவர். இதழகல் அந்தாதிக்கு மட்டும் கண்ணழித் துரைத்தல் என்னும் முறைப்படி உரை கண்டுள்ளேன். சொற்களுக்குக் கொடுக்கப் பட்டுள்ள பொருளை மட்டும் படித்தால், அதுவே பிண்டமாகக் கொண்டு உரைத்தல் என்ற பொழிப்புரையாகிவிடும். இங்கு தந்துள்ள உரையைப் பதவுரையாகவும், பொழிப்புரையாகவும் கொள்ளலாம்; பதிற்றுப்பத்தந்தாதியும், வெண்பா அந்தாதியும் கதலிபாகமான எளிதாகப் பொருள் காணக் கூடியபாடல்கள், பதவுரையோ, பொழிப்புரையோ, வேண்டியதில்லை, ஆங்காங்கே ஒருசில அருஞ் சொற்களுக்கு மட்டும் அரும் பதவுரையும் இன்றியமையாத இடங்கள் சிலவற்றில் சிறு விளக்கங்களும் தவத்திரு கந்தசாமி அடிகள் தந்துள்ளார்; அவற்றை அப்படியே பயன் படுத்திக் கொண்டேன்.

கந்தன் திருவருள் இல்லையேல், இதழகல் அந்தாதிக்கு என்போல்வார், உரைகாண இயலாது. அருள்மிகு கந்தவேள் கருணைக்கு இலக்காக்கி இந்த அரிய நூலுக்குச் செவ்விய உரை காண வாய்ப்பு நல்கிய அருள்மிகு முத்துக் குமாரசாமி திருக்கோவில் சீனியர் அறங்காவலர் திரு. பி. பாலசுப்பிர மணியன் அவர்களுக்கும், அவ்வப்போது பாடல்களில் எழும் இலக்கண, இலக்கிய, புராண வரலாற்று ஐயங்களுக்கு அரிய விளக்க மளித்துதவிய தமிழவேள் பேராசிரியர் இராம சுப்பிரமணியன், தவத்திரு நக்கீர அடிகள் ஆகியோருக்கும், பாடல்களைப் பிழையின்றிப் படியெடுத்துதவிய திருக்கோவில் மேனிலைப் பள்ளித் தலைமையாசிரியர் நற்றமிழ்க்கவிஞர் திரு. நு.ர. ஆறுமுகம் அவர்களுக்கும் எழுமையும் நன்றியுடையேன்.

இதழகல் அந்தாதிக்கு முன்பே ஒருவாறு உரை கண்டு, என் பணிக்கு வழிகாட்டிய சோழவந்தான் தவத்திரு கந்தசாமி அடிகளுக்கு என் தலையல்லால் கைம்மாறும் உள்ளதோ?

தவத்திரு கந்தசாமி அடிகளே இந்நூலுக்குச் சிறப்புப் பாயிரம் ஒன்றும் இதழகல் பாடலாகவே அருளித் தம் புலமைப் பெருக்கத்துக்குச் சான்று காட்டியுள்ளார்.

அவர் அடிச்சுவட்டில் சென்றதாலேயே இவ்வரிய நூலுக்கு உரை எழுதும் பணி இனிது முடிந்தது.

*அரங்க சீனிவாசன்.*

அருள்மிகு முருகக் கடவுள் துணை!

# தவத்திரு வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகள் பாடிய சென்னைக் கந்தகோட்ட கந்தபெருமான் இதழ் அகல் அந்தாதி

## சோழவந்தான் தவத்திரு கந்தசாமி அடிகள் அருளிய சிறப்புப் பாயிரம்

*தித்திக்கச் சந்த நடச்சிகிக் கந்தனைச் சென்னையிலேத்*
*தித்திக்கச் சந்தணக் கத்துகந் தாதி நெரித்தனன்றந்*
*தித்திக்கச் சந்தத நைந்தார் களிக்கச்செந் தேனிதெனத்*
*தித்திக்கச் சந்தத் திலக்கணஞ் சாற்றிய தேசிகனே!*

அன்வயம் (உரைநடை): தித், திக்கச் சந்த நடச் சிகிக் கந்தனைச் சென்னையில் ஏத்தி, திக்கு அச்சம் தணக்கத் தகு அந்தாதி தெரித்தனன் - தம் தி திக்கச் சந்ததம் நைந்தார் களிக்கச், செந்தேன் இது எனத் தித்திக்கச் சந்தத்து இலக்கணம் சாற்றிய தேசிகன்.

தேசிகன் தெரித்தனன் என்று கொண்டு கூட்டுக!

**(பதவுரை)** தித் திக்க - தித் திக்க என்ற தாளத்துடன், சந்த நட - அழகிய நடனத்தை யுடைய, சிகிக் கந்தனை - மயிலையுடைய கந்த வேளை, சென்னையில் ஏத்தி - சென்னையில் கண்டு வணங்கி, திக்கு - நான்கு திசையில் உள்ள உயிர்களும், அச்சம் தணக்க - (பிறவி) அச்சம் நீங்குதற்கு, தகு(ம்) அந்தாதி - தகுதியான அந்தாதியை, தம் - உயிர்கள் தத்தமது, தி திக்க - அறிவானது தடுமாறி, சந்ததம் - எப்போதும், நைந்தார் - வருந்தியவர்கள், களிக்க - மகிழ்வடையும்படி, செந்தேன் இது என - செந்தேன் இதுவே என்று கூறும்படி, தித்திக்க - இணிப்பாக, சந்தத்து இலக்கணம் - வண்ணக் கவிக்கு இலக்கணம் புதுவதாக, சாற்றிய - இயற்றி அருளிய, தேசிகன் - ஆசாரியன் ஆகிய தண்டபாணி அடிகள், தெரித்தனன் - திருவாய் மலர்ந்தருளினன்.

**(விளக்கம்)** தித் திக்க - தாள ஒலிக் குறிப்பு; சந்தம்-அழகு; சிகி - மயில்; திக்கு - திக்கிலுள்ளார்; (இட ஆகு பெயர்) தணத்தல் - நீங்குதல்; 'தகும்' என்பது வடமொழியில் 'அறிவு' எனப் பொருள்படும்; இங்குச்செய்யுள் இன்பம் நோக்கித் 'தி' எனக் குறுகி நின்றது; திக்க - வாய் குழறுதல்; நைந்தார் - வருந்தினோர்;

பதவுரையைத் தொகுத்துப் படித்தால் அதுவே பொழிப்புரை; ஆதலால் பொழிப்புரை தனியே தரவில்லை.

பாடல் படிக்கும் போது கடினமாகத் தோன்றினாலும் பதங்களைப் பிரித்துப் பதவுரை படிக்கும் போது செம்பாகமாகப் பொருள் தெளிவாகப் புலப்படக் காணலாம்.

இந்நூல் எழுத்து எண்ணிக்கை அமைந்த பாடல்கள் கொண்டது, ஒவ்வொரு பாடலும் இறுதியில் ஏகாரம் வருவது மரபு; பெரும்பாலும் இறுதி ஏகாரம் அசையாகவே வரும்.

# காப்பு

*தந்தியங் கையர் நகரன்ன சென்னைத் தலத்திடைநித்*
*தந்தியங் கையந் தணந்தாணங் கந்தனந் தாதியணி*
*தந்தியங் கையகன் ஞாலத்தெல் லாந்தரச் சார்ந்தளிக்கை*
*தந்தியங் கைய கணநாத னார்கழற் றாளிணையே*

**(அன்வயம்)** தந்தி அம் கையர் நகர் அன்ன சென்னைத் தலத்திடை நித்தம் தியங்கு ஐயம் தணந்து ஆள் நம் கந்தன் அந்தாதி அணிதந்து இயங்கை, அகல் ஞாலத்து எல்லாம் சார்ந்து அளிக்கை தரத் தந்தி அம் கைய கண நாதனார் கழல் தாள் இணை.

இயங்கையும் அளிக்கையும் (செய்வது) தாள் இணை என்று கூட்டுக! நித்தம் தணந்தும் என்றும் கூட்டுக!

**(பதவுரை)** தந்தி அம் கையர் நகர் அன்ன - வீணை ஏந்திய அழகியகையினராகிய கந்தருவர் நகரம் போன்ற, சென்னைத் தலத்திடை - சென்னை நகரில், தியங்கு ஐயம் - மனம் மயக்கும்சந்தேக விபரீதங்களை, நித்தம் தணந்து - நாள்தோறும் நீக்கி, ஆள் நம் கந்தன் - ஆட்கொள்கின்ற நம் கந்தனுக்கு உரிய, அந்தாதி - அந்தாதி என்னும் சிற்றிலக்கியம், அணிதந்து - அழகுபெற்று; இயங்கை - தமிழுலகில் நிலவுவதும், அகல் ஞாலத்து

எல்லாம் - விரிந்து உலகத்தில், தர - செல்வம் முழுவதும் தருவதற்கு, சார்ந்து - பரவி, அளிக்கை - காக்கப் படுவதும் செய்வது, தந்தி - யானையினது, அம்கைய - அழகிய துதிக்கையுடைய, கணநாதனார் - கணேசனது, கழல் - வீரக்கழல் அணிந்த, தாளிணை - இரு திருவடிகளேயாம்.

**(விளக்கம்)** கவிதைக் குரிய அழகு முதலிய செல்வங்கள் தருவதற்காகச் சார்ந்து அளிக்கை என்று பொருள் கொள்க. தந்தி - யாழ் நரம்பு; இங்கு ஆகுபெயராய் வீணையை உணர்த்திற்று; தானியாகுபெயர் அல்லது சினையாகு பெயர் எனக் கொள்க.

# நூல்

*காரணங் கண்ட நகர்காக்கத் தந்தசெங் கந்தன் சென்னைக்*
*காரணங் கண்டனத் தாசைதந் தானறக் காண்கிலன் என்*
*காரணங் கண்டன சில்லியத் தாற்றெரிக் கைக்கிசைந்தான்*
*காரணங் கண்டநல் லார்க்கிரங் காத கதையிதன்றே*

**(அன்வயம்)** கார் அணங்கு அண்ட நகர் காக்கத் தந்தசெம் கந்தன், சென்னை (நகரில் விளங்கும்) கார் அணங்கு அண் தனத்து ஆசை தந்தான்; அறக் காண்கிலன் என் காரணம்?

கண்டு அன சில் இயத்தால் தெரிக்கைக்கு இசைந்தான் இது கா ரணம் கண்ட நல்லார்க்கு இரங்காத கதை அன்றோ?

**(பதவுரை)** கார் - கரிய திருமேனி யுடைய, அணங்கு - உமாதேவியார், அண்ட நகர்காக்க - தேவ லோகத்தைக் காப்பதற்காக, தந்த செம் கந்தன் - பெற்ற நம் கந்த பிரான், சென்னை - சென்னை நகரில் விளங்கும், கார் - மேகம் போன்ற உபகாரகன், அணங்கு - துன்பம் தரும் இயல்பு, அண் - பொருந்திய, தனத்து - பொருளின் மீது, ஆசை தந்தான் - விருப்பத்தை அளித்தான், அற - அந்த ஆசை நீங்குதற்கு, காண்கிலன் - வழி காண்கிலன், என்காரணம் - என்ன காரணமோ? கண்டு அன - கற்கண்டு போன்ற, சில் - சிலவாகிய, இயத்தால் - சொற்களால், தெரிக்கைக்கு - தெரிவிப்பதற்கு, இசைந்தான் - உடன்பட்டான், இது - இச்செய்கை யானது, கா - கற்பகச் சோலை யானது, ரணம் கண்ட - புண்பட்டு வருந்தும், நல்லார்க்கு - உத்தமர்கட்கு, இரங்காத - இரங்கி ஏதும் கொடாத, கதை அன்றே - கதை அல்லவா?

**(விளக்கம்)** கந்தன் துன்பத்திற்குக் காரணமான பொருளாசையை அளித்தான்; ஆனால் அத்துன்பம் தீர்வதற்கான உபாயத்தைச் செய்யவில்லை; கற்கண்டு போன்ற சிறிய சொற்களால் என் துயரை நாள் வெளியிடு வதற்கு இணங்கினான்; இச்செயல் எப்படி உள்ளது என்றால், கேட்டன எல்லாம் தரும் கற்பகத் தருவானது, காயம் பட்ட நல்லவர்க்கு இரங்கி ஏதும் கொடாத கதைபோல உள்ளது - என்பது இப்பாடலின் சாரம். அணங்கு அண்தனம் என்பதற்குப் பெண்களிடம் பொருந்திய நகில் என்றும் பொருள் கொள்ளலாம்.

*கதையான தாளெனைச் சீற்றெதி ராத்திறம் காட்டியிச்ச*
*கதையான தாரென்றி டாதணித் தண்டைக் கழற்றந்திடாய்*
*கதையான தாதைக் கதத்திய னாதியர் கட்கிசைக்கை*
*கதையான தா! சென்னைக் கந்தாசிற் றேனலங் கானத்தே*

**(அன்வயம்)** கதையாது ஆள்எ(ன்)னைச் செற்றெதி ராத்திறம் காட்டி இச்சகத்(து) ஐ, யான் அது யார் என்றிடாது அணிதண்டைக் கழல் தந்திடாய்! கதை ஆ ஆன் தாதைக்கு அகத்தியன் ஆதியர்கட்கும் இசைக்கை, கதையானதா? சென்னைக் கந்தா சிறுஏனல் அம் கானத்தனே!

**(பதவுரை)** கதையான தாதைக்கும் - சரிதத்தில் நிலையான இடம்பெற்ற இடப வாகனத்தையுடைய சிவனுக்கும், அகத்தியன் ஆதியர்களுக்கும் - அகத்தியன் முதலானவர்களுக்கும், இசைக்கை - நீ உபதேசித்தது, கதையதனதா - பொய்யான செய்தியா? சென்னைக் கந்தா - சென்னையில் வீற்றுள்ள - கந்தனே, சிறு ஏனல் - சிறிய அளவின தாகிய தினைப் புனத்தை வள்ளியை அடைவதற்காகச் சுற்றிவந்த, அம் காவலனே - அழகிய காவலனே! கதையானது ஆள் - எமனது தூதன், என்னைச் செற்று - அடியேனைச் சினந்து, எதிராத் திறம் - போர் செய்ய இயலாத வலிமையை, காட்டி - என்னிடம் தந்து, இச்சகத்(து) - இந்த உலகத்திற்கு, ஐ யான் - நானே தலைவன், அது யார் - வேறு யார் உளர், என்றிடாது - என்று யாரும் ஐயம் அடையாதபடி, அணி - அழகிய, தண்டை கழல் - தண்டையோடு கூடிய திருவடிகளை, தந்திடாய் - தருவாயாக!

**(விளக்கம்)** கதையான் - கதாயுதம் ஏந்திய எமன்; செற்று - சினந்து; சகத் - சகம் - வடமொழி; சகத்+ஐ - சகதை என்பது வடமொழிச் சந்தி. சித் + அம்பரம் - சிதம்பரம் என வருதல் காண்க.

தானே தலைவன் என்பதைக் காட்டவே கந்தன் வீரக் கழலாகிய தண்டை அணிந்துள்ளான் என்று கொள்க.

ஆன் - எருது, ஆன - எருதையுடைய, ஆ - ஆறாம் வேற்றுமை உருபு. அது என ஒருமையாக வரவேண்டியது, செய்யுள் ஆதலால் 'அ' எனப் பன்மை உருபு (ஆன்+அ) பெற்றது. கதை - புகழ் வரலாறு.

*கானத் தெயினனைங் கைக்கரி தன்னைக் கனன்றிகன்றான்*
*கானத் தெயினனை யன்றாண்ட தேசிகன் கன்னியர்நீங்*
*கானத் தெயினனை யயராச் சிறையயங் கட்டியதேர்க்*
*கானத் தெயினனை நீர்த்தடஞ் சென்னியிற் காதனன்றே*

**(அன்வயம்)** கானத்து எயினன் ஐங்கைக் கரிதன்னைக் கனன்று இகன்றான் கானத் தெய்(தை)யினனை அன்று ஆண்ட தேசிகன் கன்னியர் நீங்கான் நத்து(ம்) எய் இனன் அயரா(த) சிறை அயர் கட்டிய தேர்க்கால் நத்து எயில் நனை நீர்த்துடம் சென்னையின் காதல் நன்று.

**(பதவுரை)** கானத்து எயினன் - வனத்தில் வள்ளியை அடைவதற்காக வேடனாக வந்தவன், ஐங்கைக் கரிதன்னை - ஐங்கரக் கணேசனை, கனன்று இகன்றான் - கனியின் பொருட்டுச் சினந்து பகைத்தான், கானத் தெய்(தை)யினனை - இசையாகிய 'தெய் தெய்' என்ற தாளத்தோடு நடனமாடிய சிவபெருமானை, அன்று ஆண்ட தேசிகன் - அந்நாள் சீடனாக ஆட்கொண்ட குருநாதன், கன்னியர் நீங்கான் - கன்னிப் பெண்களோடு எப்போதும் சூழ இருக்கும் மன்மத மலரம்புகளில் ஒன்றாய தாமரை மலரை, நத்துஎய் - விரும்புதலை அடைகின்ற, இனன் ஐ - சூரியனது அழகும், அயரா(த) - சோர்வடையாத, சிறை - சிறகுகளும் கொண்ட, அயம் - ஏழுகுதிரைகள் பூட்டிய, தேர்க்கால் - தேர்ச் சக்கரம், நத்து - அடைகின்ற, எயில் - மதில்களையும், நனைநீர்த்தடம் - குளிக்கின்ற நீர்த் தடாகங்களையும் உடைய; சென்னை நகர் - சென்னை மாநகரின் மீது யான்வைத்த, காதல் நன்று - பேரன்பு மிகவும் நன்று.

**(விளக்கம்)** தெயினன் - தை தை (தெய் தெய்) என நடிப்பதால் தையினன் எனப்படும் சிவன்; நத்து எய் என்பது நத்துகின்ற எய்துகின்ற என்று பொருள் படும். சூரியன் தேர்க்குதிரைகள் ஏழும், அழகும், சோராமையும் சிறகுகளும் கொண்டவை என்பது இலக்கிய மரபு. நனைநீர் - குளிக்கின்ற நீர்; தெய்யினன் - தையினன் (தை தை என்று தடனமாடுபவன்) சிவன்; சூரியன் குதிரைகளுக்கு அழகும் அயராமையும் அடை மொழிகள்; அக்குதிரைகளுக்குச் சிறகுகள் உண்டு என்பது மரபு.

*காதல னாங்கந்தண் ணாகத்தி லாடினன் காசினிநாங்*
*காதல னாங்கந் தரநாந் தணந்த களிநல்கி, நின்*
*காதல னாங்கந் தரக்கிரி சேர்நடக் காலிறை கட்*
*காதல னாங்கந்த! சென்னையின் சத்திரக் கையண்ணலே!*

**(அன்வயம்)** காது அலன், ஆங்கு அம் தண் நாகத்தில் ஆடினன், காசினி நாம் கா தலன் நாம் கந்தர நாம் தணந்தகளி நல்கி நின் காதல் அல் நாங்கு அந்தரம் கிரி சேர் நடக்கால் இறை கண் காதல! கந்த! சென்னையின் சத்திரக் கை அண்ணலே !

**(பதவுரை)** நட(ன)க்கால் - நடனம் செய்யும் திருவடிகளையுடைய, இறை - சிவனது, கண் - கண்ணில் பிறந்த, காதல - மகனே!, கந்த - கந்தனே!, சென்னையின் - சென்னையில் உள்ள, சத்திரக்கை - வேல்தரித்த கையையுடைய, அண்ணலே ! - தலைவனே! காது அலன் - காது இல்லாதவனாகி, ஆங்கு - மடுவிலிருந்த, அம்தண் - அழகிய குளிர்ந்த, நாகத்தின் - காளிங்கன் மேல், ஆடினன் - ஆடிய கண்ணபிரான், காசினி நாம் - உலகத்தார் அச்சமும், காதலன் நாம் - கற்பகச் சோலையை இடமாகக் கொண்ட இந்திரன் அச்சமும், கந்தர நாம் - மேகத்தின் அச்சமும், தணந்த - நீக்கி, மகிழ் நல்கி - மகிழ்ச்சியை ஊட்டி, நின்காதல் - உனது விருப்பத்தையும், அல்நாங்கு - பகலிலும் இருள் உண்டாக்கும் நாங்கு என்னும் மரத்தையும் உடைய, அந்தரக் கிரிசேர் - வானம் அளாவிய மலையில் உன் தொண்டு செய்யும் படி என்னைச் சேர்ப்பாயாக!

**(விளக்கம்)** நாம் என்பது அச்சம் என்ற பொருளில் மும்முறை வந்தது. இந்திரன் அச்சமும் உலகினர் அச்சமும் மேகத்தின் அச்சமும் கந்தன் தீர்த்தமையால் கண்ணன் மகிழ்ந்த வரலாறு வல்லார் வாய்க் கேட்டுணர்க.

முதலிலுள்ள காதலன் என்பதைக் காது அலன் என்று ஆக்கிக் கொல்கின்ற கலப்பைப் படையையுடைய வன் (பலராமன்) என்றும் பொருள் கொள்ளலாம். கந்தன் இந்திரன் முதலியோர் அச்சம் தீர்த்ததனால் பலராமனும் கண்ணனும் மகிழ்ந்தனர் என்கின்றார் போலும். சத்திரம் என்பது கைவிடாப்படை, இங்கு வேலுக்கு ஆகுபெயர், காசினி ஆகு பெயராய் மக்களைக் குறித்தது; காசினி - இடவாகு பெயர்.

தில்லையம் பதியில் இடையறாது ஆநந்தத் தாண்டவம் ஆடுதலானும், அத்தாண்டவத்தில் கைகளினும் கால்களே மிக்கு செயல் படுதலானும் 'நடம்கால் இறை' என்றார்.

*கைக்கிளிக் கஞ்ச லறியே னிளந்தனங் கண்டிளைத்தக்*
*கைக்கிளிக் கஞ்சக் கணையாற் சயிக்கக் கலங்கின, னின்*
*கைக்கிளிக் கஞ்ச லளித்தாங் கிரங்கிஎன் கண்ணெதிரா*
*கைக்கிளிக் கஞ்ச லதிக்கரைச் சென்னைக் களிக்கந்தனே!*

**(அன்வயம்)** கைக்கு இளிக்கு அஞ்சல் அறியேன். இளம் தனம்கண்டு இளைத்து அக் கைக் கிளிக் கஞ்சக் கணையான் சயிக்கக் கலங்கினன், நின் கைக் கிளிக்கு அஞ்சல் அளித் தாங்கு இரங்கி, என் கண்ணெதிர் ஆகு! ஐ கிளி கம் சலதி கரைச் சென்னைக் களி கந்தனே!

**(பதவுரை)** ஐக் கிளி - அழகிய கிளி மீன்களும் (கிளிச்சை), கம் - நீரும் உடைய, சலதிக்கரை - கடற்கரையில், களி சென்னை - சென்னை மாநகரில் வாழும் மக்களுக்கு நின் அருளைத் தந்து மகிழ்ந்து குடிகொண்ட, கந்தனே - கந்தவேளே!, கைக்கு இளிக்கு - சிறுமைக்கும் இழிவிற்கும், அஞ்சல் அறியேன் - அஞ்சமாட்டேன், இளம் தனம் கண்டு - இளைய மகளிருடைய இளைய மார்பகங்களைக் கண்டு மனம் தளர்ந்து, அக் கைக் கிளி(கிள்ளி) - அழகிய என்கைவிரல் நகத்தால் நகக்குறி செய்தமையால், கஞ்சக் கணையான் - தாமரை மலரை அம்பாகக் கொண்ட மன்மதனை, சயிக்க - வெல்ல இயலாமல், கலங்கினன் - கலக்க மடைந்தேன், நின்கை - உன்கையில் அமர்ந்த, கிளிக்கு - கிளியுருவான அருணகிரிக்கு, அஞ்சல் - அபயம், அளித்தாங்கு - அளித்தது போல, இரங்கி - என்மேலும் இரக்கப்பட்டு, என்கண் - என் கண்களுக்கு, எதிர் ஆகு - எதிரில் வருவாயாக!

**(விளக்கம்)** 'இளம் தனம்' எனவே இளைய மகளிர் எனப்பட்டது 'கிள்ளி' என்பது தொகுத்தல் விகாரத்தால் 'கிளி' என நின்றது. கணையாற் சயிக்க - கணையானைச் சயிக்க; கொழுநற்றொழுது என்ற குறளை நோக்குக.

மகளிர் வாய்ப்பட்டுக் கலங்கி வருந்தியவர் ஆதலின் அருணகிரி நாதரை ஈண்டு ஆசிரியர் தமக்கு உவமையாய் சுட்டினார். கிளி - அருணகிரியார் கிளியுருவாகி முருகனை அடைந்தார் என்பது வரலாறு. ஆதலால் அவர் கிளி எனப்பட்டார். கிளி - ஒருவகைக் கடல் மீன் (கிளிச்சை)

*களிக்கக் களிக்கய லாநெறி சேர்ந்திலன் காதற்சிந்தை*
*களிக்கக் களிக்கச் சிகியிற் றினந்தினங் காட்சிநல்காய்*
*களிக்கக் களிக்கச் சிரங்கீய நாடிடல் காட்டகத்திற்*
*களிக்கக் களிக்கச்சென் றாய்சென்னை யாளயிற் கண்ணியனே!*

**அன்வயம்:** (உரைநடை) கள் இக்கக் களிக்கு அயலாம் நெறி சேர்ந்திலன் காதல் சிந்தைக் களிக்கக் களிக்கச் சிகியில் தினம் தினம் காட்சி நல்காய்! களிக் கக்கு அளிக்கச் சிரங்கு ஈய நாடில்! காட்டு அகத்தில் களிக்கு அக்களிக்கச் சென்றாய்! சென்னை ஆள் அயில் கண்ணியனே!

**(பதவுரை)** காட்டு அகத்தில் - தினைப்புனத்தி லுள்ள வள்ளி வீட்டிற்கு, களிக்கு - அழகிய தேனும் தினைமாவும் கலந்த களியை உண்பதற்கும், அக்களிக்க - கலவிஇன்பத்தாற் களிப்பதற்கும், சென்றாய் - சென்றவனே, சென்னை - சென்னை மாநகரில் வந்தருளி, ஆள் - உலகினை அருள் செய்து புரப்பவனும், அயில் - கூரிய வேற்படை ஏந்தியவனும், கண்ணியனே - மலர் மாலை அணிந்த பெருமிதமுடைய முருகனே!, களிகக்கு - கேழ்வரகுக் களிபோன்று குழைவும் செறிவும் மிக்க கோழையினை அடிக்கடி கக்கி வெளிப்படுத்தும் கக்குவான் நோயினை, அளிக்க - அளிக்கவும்; சிரங்கு ஈய-சொறி, சிரங்கைத் தரவும், நாடிடல் - நீ கருத வேண்டாம், கள் - தேனையுடைய இக்க - கரும்பு வில்லனாகிய மன்மதனது, களிக்கு - காம மயக்கத்திற்கு, அயலாம் நெறி - வேறாகிய மாறுபட்ட நல்வழியில்; சேர்ந்திலன் - செல்கிலேன், காதல் சிந்தை - நின் பால் அன்பு கொண்ட என் மனம், களிக்கக் களிக்க - மேன் மேலும் மகிழும்படி, தினம் தினம் - நாள்தோறும், சிகியில் - மயிலூர்தியின் மேல் ஏறி, காட்சி நல்காய் - காட்சி தந்து அருள் புரிவாயாக !

**(விளக்கம்)** களி - குழைவு, செறிவு, கேழ்வரகு களி - களிக்கு உவமை; தேனையும் தினை மாவையும் கலந்து பிசைந்தால் அது களிபோல் இருத்தலின் அதனைக் 'களி' என்றார். குழைவும், செறிவும் உடையதாய் இருத்தலான் கோழையினைக் 'களி' என்றார்; இக்கு - கரும்பு; இக்கன் - மன்மதன்; இக்க - மன்மதனது; கக்கு - கக்குவான்; இருமல் அடிக்கடி கக்கவல்ல நோயாதலின் அதனைக் கக்குவான் என்பர்; அஃதுரண்டுக் 'கக்கு' என நின்றது.

அக் களி - கலவியின்பம்; 'களி' என்பது இன்பம்; அது ஆகுபெயராய்க் கலவியைக் குறித்தது.

சொறியும் சிறங்கும் (சொறிசிரங்கு) பெரும்பாலும் இணைந்தே வருதலின் 'சிரங்கு' எனவே சொறியும் பெறப்பட்டது; நாடிடல் - அல் ஈற்று வியங்கோள் வினைமுற்று (இடு - துணைவினை)

'இக்கன் களிக்கு' என்பது 'இக்கக் களிக்கு' என நின்றது. உயர்திணைக் கண்ணும் சிறுபான்மை விகாரம் நேர்தலுண்டு. கந்தன் + கோட்டம் - கந்தகோட்டம் காண்க.

*கண்ணியந் தந்தக் களிறேறி நேர்ந்தென்றன் காதிலறை*
*கண்ணியந் தந்தடி யாரிடை சேர்த்திலை காசில்செச்சைக்*
*கண்ணியந் தந்தழை ஆறிரங் கைய கரியகடற்*
*கண்ணியந் தந்தரர் கட்சேய்தண் சென்னைக் கதி(ர்)க் கந்தனே!*

**(அன்வயம்)** கண் இயம் தந்த களிறு ஏறி நேர்ந்து, என்தன் காதில் அறை கண்ணியம் தந்து அடியாரிடை சேர்த்திலை! காசு இல் செச்சைக் கண்ணி அந்தம் தரும் ஆறு x இரு கைய! கரிய கடற்கண் இயந்து அந்தரர் கட்சேய் சென்னைக் கதிக் கந்தனே!

**(பதவுரை)** காசு இல் - குற்றமற்ற, செச்சை கண்ணி - வெட்சி மலரால் தொடுத்த மாலையினையும், அந்தம் தரும் - அழகு தருகின்ற, தழை - இருபாலும் தழைத்து நின்ற, ஆறு x இரு - பன்னிரண்டு, அம் கைய - அழகிய கைகளையுடைய முருகனே! கரிய - கருநிறமாகிய, கடல் - கடல்போல் அகன்ற, கண்ணி - கண்களையுடைய, அம் - கங்கையாறாகிய நங்கையை, தந்த - இவ்வுலகிற் களித்த, அரர் - சிவபிரானது, கண் - நெற்றிக் கண்ணில் தோன்றிய, சேய் - செந்நிற மாய வேளே! தண்சென்னை - கடலைச் சார்ந்து எப்பொழுதும் குளிர்ச்சியாய் விளங்கும் சென்னை மாநகரில்

எழுந்தருளி, கதி கந்தனே! - உலக உயிர்களுக் கெல்லாம் கதியாய் (பற்றுக் கோடாய்) விளங்கும் கந்தனே!, தந்தம் களிறு ஏறி - தந்தங்களையுடைய 'பிணிமுகம்' என்னும் யானை மீது ஏறி, நேர்ந்து - என் எதிர் தோன்றி நின் தந்தை சிவ பெருமானுக்கு விளக்கியது போல், கண் இயம் - அரிதாய்க் கருதும் 'ஓம்' எனும் பிரணவ மந்திரத்தை, என் தன் காதில் - என் செவியில், அறை - எனக்கு விளக்கி, கண்ணியம் தந்து - பெருமையைத் தந்து, அடியாரிடை - நின் தொண்டருள் ஒருவனாய் அடியேனையும், சேர்த்திலை - சேர்த்தாயில்லை; இனியாவது சேர்த்தருள் (குறிப்பெச்சம்).

**(விளக்கம்)** தந்தக் களிறு ஏறி நேர்ந்து கண் இயம் என் காதில் அறைகின்ற கண்ணியம் தந்து அடியாரிடை சேர்த்திலை என்று கூட்டிப் பொருள் கொள்க. கண்ணி - முடிக்கணியும் மாலை எனவும் பொருள் கொள்ளலாம். செச்சை - வெட்சிமலர்; அந்தம் - அழகு; கடற்கண் - கடலிடமாகிய உலகம்; இயந்து - கடந்து, கடந்து நிற்பதால் கடவுள்; இயவுள் என்று பெயர் பெற்றார். கண்சேய் - கண்ணிற் பிறந்த மகன்.

கதிக் கந்தனே என்பதற்குக் கதிர்க்கந்தனே என்பது பாடபேதம் சென்னையில் சூரியன் போன்று விளங்கும் கந்தனே என்று பொருள், கதிர் - சூரியன்.

*கதித்த கராசலச் சீரெண்ணி டாதண்டர்க் காத்திடச்சேர்*
*கதித்த கராசலந் தீர்ந்தாரை நாடியெற் கைத்திகழேல்*
*கதித்த கராசலத் தேன் யான் நன் காள்சென்னைக் கந்தத்த*
*கதித்த கராசல சக்கண்க ளீன்ற கனத்தையனே!*

**(அன்வயம்)** கதித்த கரஅசலச் சீர்எண்ணி டாது அண்டர்க் காத்திடச் சேர் கதித் தகரா! சலம் தீர்ந்தாரை நாடி எற் கைத்து இகழேல்! கதி(யைத்) தகர் ஆசு அலந்தேன். நன்கு ஆள்! சென்னைக் கந்த! தத்தக தித்தகர் (சிவன்) ஆ சலசக் கண்கள் ஈன்ற கனத்து ஐயனே!

**(பதவுரை)** அண்டர் காத்திட - தேவரைக் காத்தற்காக, கரம் - துதிக்கையையுடைய, கதித்த - பருத்த, அசலம் - மலைபோன்ற பிணிமுகம் எனும் யானையினது, சீர்எண்ணிடாது - சிறப்பினை எண்ணிப் பாராது, கதிசேர் - விரைந்து செல்லுதற்கு, தகர் ஆ - ஆட்டுக் கடாவினையே உரிய ஊர்தியாகக் கொண்டு சென்று

பகைவரை வென்று, சென்னை கந்த - சென்னைக் கந்த கோட்டத்து எழுந்தருளிய கந்தனே!, தத் தக தித் தக ஆர் - 'தத் தக தித்தக' எனும் தாளத் தோடு ஆநந்தத் தாண்டவ மாடும் சிவனது, ஆ - வியப்பிற்குரிய, கள் சலம் கண் - தேன் நிறைந்த தாமரைமலர் போன்ற நெற்றிக்கண், ஈன்ற - தோற்றுவித்த, கனத்து ஐயனே - பெருமையை யுடைய தலைவனே, சலம் தீர்ந்தாரை நாடி - வஞ்சனை யற்ற பெருமக்களையே விரும்பி, என் கைத்து - என்னை வெறுத்து, இகழேல் - இகழ்ந்து ஒதுக்கிவிட வேண்டா, யான் - அடியேன், கதிதகர் - நற்கதியைத் தகர்க்க வல்ல, ஆசு அலத்தேன் - என் குற்றங்களால் பெரிதும் துன்புற்றேன், நன்கு ஆள் - இனியாவது என்னை நின் அடியவருள் ஒருவனாய் ஏற்றுச் செம்மையாய் ஆண்டருள்க.

**(விளக்கம்)** அசலம் - மலை; கராசலம் - யானை; தகர் - ஆட்டுக்கடா; சலசம் - தாமரை; சலம் தீர்ந்தார் - ஆன்றவிந் தடங்கிய சான்றோர்; 'தகர் ஆக' என்பது 'தகர் ஆ' என நின்றது தொகுத்தல் விகாரம், 'தத்தக தித்தக' மேள ஒலிக்குறிப்பு 'தித்தக அர்' என்பது 'தித்தகர்' என நின்றது தொகுத்தல் விகாரம்.

*கனத்தைய னைச்சினந் தாய்!சினைக் காரினக் காரணங்க*
*கனத்தைய னையக் கடத்தேகி னாய்சென்னை காக்கநின்றாய்!*
*கனத்தைய னையக்க ணாரிய ராலெய்த்த கள்ளத் தென்னி*
*கனத்தைய னையதண் டாலிறந் தாரிற் கழிதலென்றே!*

**(அன்வயம்)** கனத்து ஐயனைச் சினந்தாய்! சினைக் கார் இனக்காரன் ககனத் தையல் நையக் கடத்து ஏகினாய்! சென்னை காக்க நின்றாய்! கல்நத்து ஐய! (ை)ந யக்கண் நாரியரால் எய்த்த கள்ளத்து என் இகல் நத்து ஐயன் ஐய தண் டால் இறந்தாரின் கழிதல் என்று?

**(பதவுரை)** கனத்து - பெருமையுடைய, அ(ய்)யனைச் - பிரம்மனை, சனந்தாய் - சினந்தவனே! சினைக் - சூல்கொண்ட, கார் இனக் காரன் - மேகக் கூட்ட முடைய இந்திரனது, ககனத் தையல் - வானுலக மங்கையான தெய்வ யானை, நைய - உடலால் மெலியும் படி, கடத்து - வனத்துள்ள தினைப் புனத்துக், ஏகினாய் - குறவள்ளியை

மணக்கச் சென்றாய், சென்னை - சென்னையை, காக்க நின்றாய் காக்கும் பொருட்டு நிலைத்து நின்றாய்! கல் நத்து - மலைகளை விரும்புகின்ற ஐய - தலைவனே! (ை)நயக்கண் - காதல் மயக் கூட்டும் கண்களுடைய, நாரியரால் - பருவப் பெண்களால், எய்த்த என் - மனம் தளர்ந்த என்னுடைய, இகல் - பகையானது, நத்து - சங்காயுதம் தரித்த, ஐயன் - திரு மாலினது, ஐய - அழகிய, தண்டால் - தண்டாயுதத்தால், இறந்தாரின் - இறந்த அசுரர் போல, கழிதல் - அழிவது, என்று - எக்காலமோ?

**(விளக்கம்)** அயன் என்பது எதுகை நோக்கி ஐயன் என வந்தது, நைதல் - ஊடுதல் என்ற பொருளில் வந்தது; கல் + நத்து - கன்னத்து என வரற்பாலது செய்யுள் நலம் நோக்கிக் 'கனத்து' என வந்தது. 'நயக்கண்' என்பது எதுகை நயம் நோக்கி '(ை)நயக்கண்' என வந்தது. 'ஐ' என்பது அழகிய எனப் பொருள்பட்டது. இறந்தாரின் - இறந்தார் போல; இன் என்ற ஐந்தனுருபு ஒப்புப் பொருளில் வந்தது; மடக்கணிப் பாடல்களில் நகர னகரங்கள் பேத மின்றி வரும்; அதன் படி நயக்கண் என வரற் பாலது (ை)நயக் கண் என வந்தது.

*கழியங்கங் கண்டத் தணிந்தார்தஞ் சேயெயில் கார்நிறத்த*
*கழியங்கங் கண்டசென் னைக்கந்த நாயகன் கல்லிடத்திற்*
*கழியங்கங் கண்ட ரிணறைஞ்சிய சேந்தன் கழல்களைநார்க்*
*கழியங்கங் கண்டரிக் கத்தந்த சத்தியங் காணரிதே*

**(அன்வயம்)** கழி அங்கம் கண்டத்து அணிந்தார் சேய்; எயில் கார் நிறத்து அகழி அங்கம் கண்ட சென்னைக் கந்த நாயகன், கல் இடத்தில் கழி அங்கங்கு அண்டர் இறைஞ்சிய சேந்தன், கழல்களை நார்க் கழியம் கம்கண் தரிக்கத் தந்த சத்தியம் காண அரிதே!

**(பதவுரை)** கழி - ஊன் கழிந்த (நீங்கிய), அங்கம் - எலும்பை மாலையாக, கடத்து - கழுத்தில், அணிந்தார் தம்சேய் - தரித்த சிவபிரான் மகன், எயில் - மதில்களையும், கார்நிறத்து - கரிய நிறத்தையுடைய, அகழி - அகழியையும், அங்கம் - மற்றை உறுப்புகளையும், கண்ட - பெற்றுள்ள, சென்னைக் கந்த - சென்னைக் கந்தனாகிய, நாயகன் - தலைவன், கல்இடத்தில் - மலைகளில், அங்கு அங்கு - கண்ட இடந்தோறும், அண்டர் - தேவர்கள், இறைஞ்சிய

- வணங்கிய, சேந்தன் - செவ்வேளினுடைய, கழல்களை - திருவடிகளை, நார் - அன்பால் பற்றிய, கழியம் - ஊன்று கோலை உடையோம், கம். - தலையிலும், கண் - கண்களிலும், தரிக்க - அணியவும் தரிக்கவும், தந்த - தந்தருளிய, சத்தியம் - பேருண்மையை, காண அரிது - பிறர் அறிதற்கு இயலாது.

**(விளக்கம்)** கண்ட என்பது செய்யப் பட்ட எனப்பொருள் தந்தது. அங்கம் - முறையே எலும்பு, உறுப்பு எனம்பொருள் பட்டது, கழி - (ஊன்று) கோல், கம் - தலைதரிக்க என்பது தலைக்கு அணியவும், கண்ணுக்குத் தரிசிக்கவும் என முறையே பொருள் பட்டது, சத்தியம், ஞான உபதேசம் என்றும் கொள்ளலாம், காண அரிது என்பது காணரிது என மருவியது.

*காணக்கண் ணாயிரந் தாங்கினன் சேனையங் கையன், இச்சை*
*காணக்கண் ணாயிரந் தாயா ரறிசென்னைக் கந்தன் அன்னாற்*
*காணக்கண் ணாயிரந் தாலென நாடிக் கழறறத்தான்*
*காணக்கண் ணாயிரந் தாளக லாயென்றன் கள்ளநெஞ்சே!*

**(அன்வயம்)** காணக் கண் ஆயிரம் தாங்கினர் சேனைஅம் கையன்; இச்சை காணக்கண் ஆய் இரந்து ஆயார் அறி சென்னைக் கந்தன், அன்னாற் காண்! நாய் இரந்தால் என நாடிக் கழறு! அறத்தான் காணக்கண்ணாய்! இரு அம் தாள் அகலாய் என்தன் கள்ள நெஞ்சே!

**(பதவுரை)** காண - பிறர்க்குக் கண்போலத் தெரியும், கண் ஆயிரம் - ஆயிரம் கண்களை, தாங்கினன் - கொண்ட இந்திரனது, சேனை - படையாகிய, அம்கையன் - அழகிய வரிசை யுடையவன், இச்சை - ஆசையானது, காணக்கண் ஆய் - பொன்னினிடமாக (வைத்து), இரந்து - அற்பரிடம் சென்று யாசித்து, ஆயார் - வருந்தாத சான்றோர், அறி - நன்கு அறிந்து தொழும், சென்னைக் கந்தன் - சென்னைக் கந்த கோட்டத்திற் குடிகொண்டுள்ள கந்தவேள், என்கள்ள நெஞ்சே - உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசும் என் மனமே!, அன்னாற் காண - அவனைத் தரிசிக்க, கண் - எண்ணுவாயாக, நாய் - நாயானது, இரந்தால் என - தன்னை வளர்த்த வனிடம் கெஞ்சுவது போல், நாடி - விரும்பி, கழறு - போற்று வாயாக! (இவ்வாறு செய்தால்), அறத்தான் - இயமதருமன் நரகில், காணக்கு - செக்கினிடத்து, அண்ணாய் - அடையமாட்டாய், இரு அம்தாள் - இரண்டாகிய அழகிய கந்தன் திருவடி களினின்றும், அகலாய் - நீங்கமாட்டாய் !

**(விளக்கம்)** என் கள்ள நெங்சே! கண்! கழறு! அண்ணாய்! என்று கூட்டுக. காணம், பொண்ணுக்கும் (எள் ஆட்டும்) செக்குக்கும் பெயர். இரு அம்தாள் என்பது இரந்தாள் என வந்தது செய்யுள் விகாரம். ஆய்தல் - வருந்துதல்; கை - படை வரிசை. இப்பாடல் நெஞ்சுக்கு அறிவுறுத்தல் என்னும் துறையைச் சேர்ந்தது. 'நாய் இரந்தால் என' என்ற உவமை மிக நயமானது. காணத்தில் என்பது காணக்கு எனவந்தது வேற்றுமை மயக்கம்.

*கள்ளத் தனத்தைய லார்நெறி யிற்செலக் கண்டனைஇக்*
*கள்ளத் தனத்தைய கற்றிநின் ஆசைக் களியடியார்*
*கள்ளத் தனத்தைய னாதிய ரெய்தெழிற் காட்சி நல்காய்*
*கள்ளத் தனத்தைய லாட்கெளி யாய்சென்னைக் கட்கந்தனே!*

**(அன்வயம்)** கள் அத்தம் நத்து அ(ய்) யலார் நெறியில் செலக் கண்டனை இக் கள்ளத் தனத்தை அகற்றி நின் ஆசைக் களி அடியார்கள் அத்தன் நத்து ஐயன் ஆதியர் எய்து எழில் காட்சி நல்காய்! கள் அத் தனத் தைய லாட்டு எளியாய்! சென்னைக் கண் கந்தனே!

**(பதவுரை)** கள் - தேன் போன்று இனிய, அ - அழகிய, தனத் தையலாட்கு - கொங்கை களை (மார்பகங்களை) யுடைய வள்ளி நாயகிக்கு, எளியாய் - எளிமையான வனே, சென்னைக் கண் - சென்னையில் வீற்றுள்ள, கந்தனே - கந்த பெருமானே! கள் அத்தம் - பொய்யான செல்வத்தை, நத்து - விரும்புகின்ற, அ(ய்)யலார் - பிறசமயத்தாரது, நெறியில் செல - வழியிலே செல்லும் படி, கண்டனை - செய்தாய்! சென்னைக் கண்கந்தனே! - சென்னை மாநகர் கந்தனே! இக்கள்ளத் தனத்தை - இந்தக் கபடச் செயலை, அகற்றி - நீக்கி, நின் - நின்னிடத்தில், ஆசைக்களி - பத்தியாகிய மகிழ்வில் திளைக்கும், அடியார்கள் - தொண்டர்களும், அத்தன் - சிவபிரானும், நத்து ஐயன் - சங்காயுதம் தரித்த திருமாலும், ஆதியர் - முதலானோர், எய்து - தரிசித்த, எழில் காட்சி - அழகுக் காட்சியை, நல்காய் - எனக்கு அருள் வாயாக!

**(விளக்கம்)** எளியாய்! கந்தனே! நல்காய் என்று கூட்டுக! 'கள்' பொய், இனிமை என்னும் பொருள்களில் வந்துள்ளது. அடியார்களத்தன் எனற் பாலது, செய்யுள் நயம் நோக்கி 'அடியார் கள்ளத்தன்' என ஒற்று மிக்கு வந்தது.

நத்து என்பது விரும்புகின்ற என்றும் சங்கு என்றும் இருவகைப் பொருள் பட இரு முறை வந்துள்ளது.

அயலார் என்பது எதுகை யின்பம் நோக்கி அ(ய்)யலார் என வந்தது. அத்தனம் என்பதிலுள்ள 'அ' அழகு என்ற பொருளில் வந்தது. இது நக்கீரர் கருத்து.

*கட்கந் தணந்தறி யாக்கை இலக்கர் களைநின்றன்காற்*
*கட்கந் தணந்தச் செறியிளை யானன்னர்க் காதலித்தேன்*
*கட்கந் தணந்தக் களிறேறி நேர்தல்எக் காலங்கண்டார்*
*கட்கந் தணந்தரர் சீர்கைக்கச் செய்(ச்)சென்னைக் காணியனே*

**(அன்வயம்)** கட்கம் தணிந்து அறியாக் கை இலக்கர்களை நின்றன் கால் கண் கம் தள் நந்தச் செறி இளையான் அன்னர்க் காதலிந்தேன் கண் கந்து அண் அந்தக் களிறு ஏறி நேர்தல் எக்காலம்? கண்டார் கட்கு அம் தண் அந்தரர் சீர் கைக்கச் செய் சென்னைக் காணியனே!

**(பதவுரை)** கண்டார்கட்கு - மெய்மறந்து நின்னைப் பார்த்தவர்க்கு, அம் - ஆகாய கங்கையின், தண் - குளிர்ச்சியுடைய, அந்தரர் - தேவலோகத் தாரது, சீர்கைக்க - சிறப்பு மிக்க செல்வங்களும் வெறுக்குமாறு, செய் - செய்யவல்ல, சென்னை - சென்னை மா நகருக்கு, காணியனே - உரிமை உள்ளவனே! கட்கம் - வாளாயுதம், தணந்து - நீங்கி, அறியாக்கை - அறியாத கைகளை யுடைய, இலக்கர்களை - நூறாயிரம் வீரர்களுடன், நின்றன் கால் - உன்திருவடிகளில், கண் கம் - விழிகளும், தலையும், தள் நந்த - தவறு கெடும்படி, செறி - பொருந்தி வணங்கும், இளையான் - உனக்குத் தம்பியாகிய வீரவாகுவும், அன்னார் - அவனுக்குப் பின் பிறந்தார் ஆகிய நவ வீரர்களையும், காதலித்தேன் கண் - விரும்பும் என்பால், கந்து அண் - நட்ட தறியில் உனக்கு அடையாள மாகப் பொருந்திய உருவத்துடன், அந்த - அழகுடைய, களிறு ஏறி - யானை மீது ஏறி, நேர்தல் - எதிரில் நீ வருவது, எக்காலம் - எக்காலமோ?

**(விளக்கம்)** வீரவாகு முதல் நவ வீரர்களும், நூறாயிரம் சேனை வீரரும் தொடர்ந்து வரச் சென்று சூரனைக் கொன்றான் கந்தன் என்பது புராணம் அவர்களைப் போல் உன் தொண்டு செய்ய விரும்பினேன் என்று கொள்க.

அந்த வீரவாகு விழிகளும் சிரமும் (தவறுகெடும்படி) பொருந்த வணங்கும் திருவடியினன் கந்தன். கந்து என்பது தறி. தறியில் குடி கொண்டதால் கந்தன் எனப்பெயர் வந்தது. அந்தத் தறியில் ஆவாகனமான வடிவுடன் யானைமேல் எனக்கு எதிர் வரல் எக்காலம்? என்பது கவிதையின் சாரம்.

கண்டார் கட்கு என்பது முதல் காணியனே என்பது வரை உள்ள இறுதிப்பகுதி கந்தனுக்கு விளி. இப்பகுதியில் தேவருலகினும் சிறந்தது சென்னை எனப்பட்டது காண்க.

*காணிக்கை யாகத்தந் தேனென்னைத் தாங்கழி காய்சினத்தேன்*
*காணிக்கை யாகத்தந் தேனென்னைத் தாங்கி கலக்கனகங்*
*காணிக்கை யாகத்தந் தேனென்னை யங்கள் கழறிக் கெட்டேன்*
*காணிக்கை யாகத்தந் தேனென்னைச் சென்னையிற் காகந்தனே!*

**(அன்வயம்)** காண் இக்கு ஐ ஆகத் தந்தேன்; எல் நைத்தாங்கு அழி காய் சினத்தேன்; காணி கை ஆகத்து அம் தேன் நெல் நைத்தாங்கு இகலக் கனகம் காணிக்கு - ஐயா! கத்து அ(று)ந்தேன்! என் (கின்ற) நயங்கள் கழறிக் கெட்டேன். என்னைச் சென்னையில் காணிக்கை யாகத் தந்தேன் கா கந்தனே!

**(பதவுரை)** காண் - காண்கின்ற, இக்கு - கரும்பு வில்லையுடைய, ஐ - தலைவனாகிய மன்மதனது, ஆகத்தந் தேன் - மனத்தின் கண் உள்ள தந்திரத்தையுடையேன், எல் - சூரியன், நைந்தாங்கு - அழிப்பது போன்ற, அழிகாய் - மிகக் காய்ந்த, சினத்தேன் - சினம் உடையேன், காணி - உரிமையான செல்வத்தையும், கை - வெறுக்கச் செய்யும், ஆகத்து அம் - உடலில் அழகும், தேன் - இனிமையும் உடைய பெண், நெல் - நெல்லை, நைத்தாங்கு - (உரலில்) குற்றுவதுபோல், இகல - மாறுபட்டு வருத்தலால், கனகம் - பொன், காணிக்கு - காணி என்னும் சிற்றளவிற்கு, ஐயா - ஐயனே! (தலைவனே!) கந்து அ(று)ந்தேன் - உரக்கப் பேசுதலைத் தவிர்ந்தேன், என் - என்பது போன்ற, நயங்கள் - நயமொழிகள், கழறிக் கெட்டேன் - செல்வம் படைத்தவர்பால் நயம்படப் பேசிச் சீரழிந்தேன், என்னை - அடியேனை, சென்னையில் - திருவோங்கு சென்னையில், காணிக்கையாக - உன் உடைமையாக, தந்தேன் - சமர்ப்பித்து விட்டேன், கந்தனே - அருள்மிகு கந்தவேளே, கா - என்னைக் காப்பாற்று!

**(விளக்கம்)** மன்மதன் போன்ற வஞ்சனையும் ஊழிச் சூரியன் போன்ற வெப்பமும் செல்வத்தைத் துச்சமாக மதிக்கச் செய்யும் அழகிய பெண்கள் நெல்லைக் குற்றுவது போல் துன்புறுத்துவதால், காணி(சிறிய) அளவாகிய அற்பக் காசுக்காக செல்வரிடம் சென்று உரக்கப் பேசாமல் நயம்படப் பேசிச் சீரழிந்தேன். என்னை உன் உடைமை யாக்கிவிட்டேன். கந்தனே! என்னைக் காப்பாற்று என்பது பாடலின் சாரம்.

பாடல் கடினமாகத் தோன்றினும் சிறிது கவனம் செலுத்திப் படித்தால் பாகுபோல் இனிமை பயக்கும். முயல்வார் முயற்றின்பம் பயில்வார்.

*காகத் திலங்கியன் றிந்திரற் காத்த கரிக்கிளையாய்!*
*காகத் திலங்கியிட் டாற்கௌி யாாதந்த கந்தகல்லாக்*
*காகத் திருங்கிள்ளை யேற்றாய்! தண் சென்னையின் கண்இயற்சீர்க்*
*காகத் திலங்கிச் சதையத் தெய் யாதென் கடைக்கணியே!*

**(அன்வயம்)** காகத்தில் அங்கு இயன்று இந்திரன் காத்த கரிக்கு இளையாய்! கா கத்தில் அங்கி இட்டாற்கு எளியார் தந்த கந்த! கல் ஆக்கா! கத்தில் அம் கிள்ளை ஏற்றாய்! எய்யாது என் கடைக் கணி!

**(பதவுரை)** அங்கு - சைய மலையிடத்து, இயன்று - தோன்றி, காகத்தில் - காக வடிவு கொண்டு, இந்திரன் - இந்திரனைக், காத்த - (குண்டிகையைக் கவிழ்த்து காவிரி நதியைத் தந்து) காத்த, கரிக்கு இளையாய் - கணபதிக்குத் தம்பியே! கா - காண்டவ வனத்தின், கத்தில் - சந்தில் (பொந்தில்), அங்கி இட்டற்கு - நெருப்பை யிட்ட அருச் சுனனுக்கு, எளியார் - எளியவராகிய சிவன், தந்த கந்த - பெற்ற கந்தனே! கல் ஆக்கா - மலையாகிய (ஆக்கம்) செல்வம் உடையவனே! கத்தில் - முதன்மையுடைய, அம்கிள்ளை - அழகிய கிளி வடிவான, ஏற்றாய் - அருணகிரியாரை ஏற்றுக் கொண்டவனே, தண் - குளிர்ந்த, சென்னையின் கண் - சென்னையிலே, இயல் - தகுதியான, சீர் - சிறப்புடைய, காகத்து - அவிட்ட விண் மீன் போல், இலங்கி - ஒளிவிட்டுச், சதையத்து - சதய விண்மீன் போல், எய்யாது - ஒளிமழுங்கி அறியாமை கொள்ளாமல், என் - என்னைக், கடைக்கணி - கடைக்கண்ணால் நோக்கியருள்க!

**(விளக்கம்)** இந்திரற் காத்த என்பது கொழுநற் றொழுதெழுவாள் என்பது போல் இந்திரனைக் காத்த என்று விரியும். என் கடைக்கணி என்பதும் அதன்படி என்னைக் கடைக்கணி என விரியும்.

கத்து - (மரச்) சந்து (பொந்து). கத்து - முதன்மை. கல் - மலை. ஆக்கம் என்பது ஆக்க முடையவனே என்ற பொருளில் விளி ஏற்ற போது, ஆக்கா என வந்தது, ஆக்கம் - செல்வம், கத்து - முதன்மை, காகம் - அவிட்டம், அது ஒளி மிக்கது, சதையம் - ஒளியில்லாதது அது அறியாமைக்கு உருவகமாக வந்தது; எய்யாமை - அறியாமை.

இந்திரன் தவம் கண்டு இரங்கிக் கணபதி காகம் வடிவம் கொண்டு, அகத்திய முனிவரின் குண்டிகை நீரைக் கவிழ்க்க, அந்நீரே காவிரியாக ஓடியதுஎன்பது புராண வரலாறு, அந்தச் செய்தியே இப்பாடலின் முதலில் குறிப்பிடப் பட்டுள்ளது.

*கடைக்கணித் தாளத் தனச்சேடி யாலெய்தக் காதலித்தாய்!*
*கடைக்கணித் தாள ரிதஞ்செய்தி டாரரிக் கானகத்தின்*
*கடைக்கணித் தாளனைச் சென்னையிற் சேயைக் கனியளியாற்*
*கடைக்கணித் தாள நனியேத்த தேநலங் காணண்ணலே!*

**(அன்வயம்)** கடு ஐக் கணி தாளத் தனச்சேடி யால்எய்தக் காதலித்தாய்! கடைக்கு அணித் தாளர் இதம் செய்திடார். அரிக் கானகத்தின் கடைக் கணித் தாளனைச் சென்னையிற் கணி அளியால் கடைக்கணித்து ஆள நனியேத்து! அதே நலம் காண்! அண்ணலே!

**(பதவுரை)** அண்ணலே - யாரோ ஒரு தலைவியைக் காதலித்த தலைவனே! கடு ஐ - விடம் போன்ற தீங்கும் அழகும் கொண்ட, க(ண்)ணி - கண்களை யுடைய அத்தலைவியை, தாளத்தன - கைத்தாளம் போன்ற நகில்களையுடைய, சேடியால் - அவளின் தோழியைக் கொண்டு, எய்த - அடையும் பொருட்டு, காதலித்தாய் - விரும்பினவனே! கடைக்கு - கீழ்மைக்கு, கயமைக்கு, அணித்தாளர் - அருகிலுள்ளோரே நின் ஏவலர், இதம் செய்திடார் - அத்தகைய ஏவலர் உனக்கு நன்மை செய்ய மாட்டார்கள், அரி - சிங்கங்கள் வாழ்கின்ற, கானகத்தின் கடை - காட்டினிடத்தே, காணி - வேங்கை மர வடிவு கொண்டு, தாளனை - வள்ளியை அடைதற்கு முயன்ற கந்தனை, சென்னையில் - சென்னையில் வாழும், சேயை - முருகக் கடவுளை, கனி - முதிர்ந்த, அளியால் - பெருங்கருணையால், கடைக்கணித்து - கடைக்கண்களால் பார்த்து, ஆள - ஆட்கொள்ளும் பொருட்டு, நனி ஏத்து - மிகவும் துதிப்பாயாக! அதே - துதிப்பதுவே, நலம் - நன்மை தரும், காண் - இதை நன்கறிவாயாக.

**(விளக்கம்)** யாரோ ஒரு பெண்ணைக் காதலித்து அவளை அடைவதற்காக அவளின் தோழியையும் தன் பாங்கனையும் துணை கொள்ளத் துடிக்கும். ஓர் உலகிய லாளனை நோக்கிக் கூறுவதாக அமைந்தது இப்பாடல்.

கடு + ஐ - கடை, இவ்வாறு சொல் புணர விதியில்லை; ஆயினும் எதுகை நோக்கி ஏற்பது பொருந்தும்; கடை - கீழ்மை அணித்து - அருகிலுள்ள, ஆளர் - ஏவலர்; (கானகத்தின்) கடை - இது எழாம் வேற்றுமை உருபு, இடப் பொருள் உணர்த்துவது.

அண்ணலே! சேயை ஏத்து அதே நலம் என்று கூட்டுக. அண்ணல் என்பது பொதுவாகத் தலைவனைக் குறிக்கு மாயினும் இங்கு சாதாரண உலகியல் விரும்பும் மானுடத் தலைவனையே குறித்தது.

*காணாத கங்கைக்க கில்லேன்நின் னாற்செய்த கற்கிணற்றிற்*
*காணாத கங்கை எந் நாள்காணச் செய்தல்? கழறிதண்டக்*
*காணாத கங்கையர் கண்ணணி தான கதலி, கந்தி*
*காணாத கங்கைய தாஞ்சென்னைக் கந்த கலிக் கஞ்சலே*

**(அன்வயம்)** காணாது அகம் கைக்க கில்லேன் நின்னாற் செய்த கற்கிணற்றிற் காணாத கங்கை எந்தாள் காணச் செய்தல்? கழறு! இதண் தக்காள் நாத! கம் கையர் கண் அணி தாள! கதலி, கந்தி, காள் நாத கம் கையது ஆம் சென்னைக் கந்த!

**(பதவுரை)** நின்னால் - நீ கூறிய படி, செய்த - அடியேன் தோண்டிய, கல்கிணற்றில் - பாறைக் கிணற்றில், காணாத - இது காறும் ஊறாத, கங்கை - கங்கை நதிபோல் மிக்க நீரை, காணச் - நான் காணும்படி, செய்தல் எந்நாள் - செய்வது எப்போது? கழறு - கந்தா! நீ கூறு, காணாது - அக்கிணற்றில் நீர் சுரப்பதைக் காணாமல், அகம் - மனம், கைக்க கில்லேன் - வெறுக்க மாட்டேன், (கிணறு தோண்டுவதை நிறுத்த மாட்டேன்) இதண் - தினைப் புனத்துப் பரணில் இருந்த, தக்காள் நாத - தக்க அழகி யாகிய வள்ளிக்கு, நாதனே! கம் - பிரம்மன் தலையை ஏத்திய, கையர் - கையையுடைய சிவபிரான், கண் அணி - கண்களில் ஒற்றிக் கொஞ்சும், தாள - திருவடிகளை யுடையவனே! கதலி - வாழைக்கும், கந்தி - கமுகுக்கும் (பாக்கு மரம்), காள் - கருநிறமும், நாதம் - முழக்கமும் கொண்ட, கம் - மேகங்களுக்கும், கையறு ஆம் - இடமாகிய, சென்னையில் - சென்னையில் உள்ள, கந்த - கந்தனே! கலிக்கு - "இது கலிகாலம்; இப்போது கல் கிணற்றில் நீர்வரச் செய்தால் உலகம் நம்பாது" என்று கலிகாலத்துக்கு, அஞ்சல் - அஞ்சாதே!

**(விளக்கம்)** நின்னால் செய்த கல் கிணற்றில் கங்கை காணச் செய்தல் எந்நாள்; கழறு (நீர்) காணாது அகம் கைக்கிலேன் என்று கூட்டிப் பொருள் காண்க! இதண் - பரண். கருமையைக் குறிக்கும்கானம் என்ற சொல் எதுகை நோக்கிக் காள் என நின்றது. கையது - இடமாவது.

தண்டபாணி அடிகள் முருகனிடம் அருள் வாக்குப் பெற்று ஒரு கிணறு தோண்டினார். அது பாறைக் கிணறு ஆகி நீர் சுரக்கவில்லை. அதனால் கந்தனிடம், "கற்கிணற்றில் நீ ஊறும் அற்புதம் கலிகாலத்தில் செய்யலா காது என்று அஞ்சாதே! இக்கிணற்றில் நீர் ஊறுவது எப்போது என்று கூறுவாயாக" என்று கேட்கின்றதாக இப்பாடல் அமைந்துள்ளது. அவர் வேண்டியபடி நீர் சுரந்தது என்பர். இப்பாடலைப் பாராயணம் செய்பவர் கந்தன் அருள் வெள்ளம் பெறுவர்.

*கலிக்கால னஞ்சக் கலசத்தி னான்அன்னர்க் கண்டிறைஞ்சக்*
*கலிக்கால னஞ்சத்தி கண்டேங்கச் செய்திறம் கற்கநல்கார்*
*கலிக்கால னஞ்சயின் றார்தந்த சேந்த! கடற்சென்னையாய்*
*கலிக்கால னஞ்சரண் சேர்ந்தாய்! நல் லாறக் கரக்கந்தனே!*

**(அன்வயம்)** கலிக் - காலன் அஞ்சக் கலசத்தினான் அன்னர்க் கண்டு இறைஞ்சக், கலிக் - கால், அல் நம் சக்தி கண்டு ஏங்கச் செய்திறம் கற்க நல்கு! ஆர்கலிக் - காலன் - நஞ்சு அயின்றார் தந்த சேந்த! கடல் சென்னை யாய்! கல் இக்கால் அ(ன்)னம் சரண் சேர்ந்தாய்! நல் ஆறு அக்கரக் கந்தனே!

**(பதவுரை)** ஆர்கலி - கடலில் தோன்றிய(நஞ்சு), காலன் - எமனைப் போன்ற கொடிய (நஞ்சு), அயின்றார் - உண்ட சிவபெருமான், தந்த - பெற்ற, சேந்த - சேந்தனே! கடல் - கடற்கரையிலுள்ள, சென்னையாய் - சென்னையில் உள்ளவனே! கல்வி - பருவத்திற்கு மேற்பட்ட நுண்ணிய அறிவுடைய, கால் - வனத்தில் வாழ்கின்ற, அ(ன்)னம் - அன்னம் போன்ற வள்ளியின், சரண் - பாதங்களில், சேர்ந்தாய்! - சேர்ந்து வணங்கினவனே! நல் - நல்ல, ஆறு அக்கர - சடாட்சர மந்திரத்தையுடைய, கந்தனே! - கந்த பெருமானே! கலி - கலி என்னும், காலன் - காலத்திற்கு உரியவன், அஞ்ச - அஞ்சும்படி, கலசத்தினான் - கலசத்தையுடைய அகத்தியனை, அன்னர் - ஒத்த முனிவர்களைக், கண்டு - தரிசனம் செய்து, இறைஞ்ச - வணங்கவும், கலிக்-கால் - வலிய பெருங்காற்றும்,

அல் - இருள் போன்ற அறியாமையும், நம் - எங்களது, சக்தி - வல்லமையை, கண்டு - அறிந்து, ஏங்க - ஏங்கி அகலவும், செய் - செய்ய வல்ல, திறம் - திறத்தை, கற்க - கற்கும்படி, நல்கு - அருள்புரிக!

**(விளக்கம்)** காலன் என்பது கால புருடனையும் எமனையும் குறிக்கும் பெயர்; அன்னரைக் கண்டு என்பது செய்யுளாதலால் அன்னர் கண்டு என மருவி வந்தது. கலி - வலிமை, கலிக்கால் - வலியகாற்று. அல் - அறியாமை; ஆர்கலி நஞ்சு, காலன் நஞ்சு எனத் தனித்தனிக் கூட்டுக; கல்வி - பருவத்தை மிஞ்சிய நுண்ணறிவு, கால் - வனம்; அன்னம் - வள்ளி. சரண் - திருவடி; ஆறு அக்கரம் - "சரவண பவ" என்னும் மந்திரம். ஆறு அக்கரம் என்பது 'நம குமராய' என்னும் மந்திரம் என்பார். நச்சினார்க்கினியர், அடிகளும் வெண்பா அந்தாதியில் 'குகரம் முதல் ஆறக்கரம்' என்று குறிப்பிட்டுள்ளார்.

*கரக்கக் கரக்கக்கல் லார்கடைக் கேங்கிக் கலங்கினன் கிக்*
*கரக்கக் கரக்கலை கற்றாரென் னாதெனைக் காநிணத்தா கரக்கக்*
*கரக்கத்தர் கண்தந்த கந்த!செங் கைச்சத்தியாய்!*
*கரக்கக் கரக்கண நேர்சக்க ரக்கர்கட் காய்கண்ணனே!*

**(அன்வயம்)** கரக்கக் கரக்கக் கல்லார் கடைக்கு ஏங்கி கலங்கினன், "கிக்கிரக் கக்கரக்" கலை கற்றார் என்னாது எ(ன்)னைக் கா!

நிணத்து ஆகரக் கக் கரக் கத்தர் கண் தந்த கந்த! செங்கைச் சத்தியாய்!

கரக் கக்கு அரக்கணம் நேர் சக்கு அரக்கர்கட் காய் அண்ணலே!

**(பதவுரை)** நிணத்து - ஊன் கொழுப்பிற்கு, ஆகர - இடமாகிய, க - பிரம்மன் தலையை, கர - ஏந்திய கையையுடைய, கத்தர் - சிவபிரானது, கண்தந்த - நெற்றிக் கண் தந்த, கந்த - கந்த வேளே! செங்கை - சிவந்த கையிலேந்திய, சத்தியாய் - வேலாயுதம் உடையவனே, கரக்கக்கு - விஷக் கக்குதலையுடைய, அரக்கணம் நேர் - பாம்புக் கூட்டம் போன்ற, சக்கு - கொடிய கண்களையுடைய அரக்கர்கள் - அசுரர்களை, காய்கண்ணனே - சினக்கின்ற விழிகளை யுடையவனே!, கல்லார் - கல்லாக் கயவர்கள், கரக்கக் கரக்க - தம்பால் உள்ள செல்வத்தை இல்லை என்று மறைத்த போதிலும், கடைக்கு - அவர்கள் வாசற்படியில், ஏங்கிக் - காத்திருந்து ஏங்கி, கலங்கினன் - வருந்தினேன், கிக்கரக் கக்கர - பொருள் தெரியாமல் கிக்கரக்கக்கர என்று உளறுகின்ற, கலை - பிறமொழிக் கலைகளைக், கற்றார் -

கற்றவர்கள், என்னாது - அக்கலைகளைக் கல்லாதவன் என்று என்னை இகழாமல், எ(ன்)னைக் கா - அடியேனைக் காத்தருள்!

**(விளக்கம்)** கல்லார் - ஈத்துவக்கும் இன்பம் அறியாதவர்; உலோபர் 'கிக்கர கக்கர' ஆங்கில மொழியின் உளறல் போன்ற ஓசை ஆங்கிலம் கற்றார் அடிகளை ஏளனம் செய்தனர் போலும்! அதனால் வருந்திய அடிகள் முருகனிடம் முறையிடுகின்றார்! க-பிரமன்; இங்கு அவன் தலையைக் குறித்தது; முதலாகுபெயர் கரக்கக்கு; கக்கு-கக்குதல்; வாந்தி-முதனிலைத் தொழிற் பெயர்; அராக்கணம் என்பது எதுகை நோக்கி அரக்கணம் எனவந்தது விகாரம், இதனை ஈறுகுறுகிய விகாரம் என்பர்; சக்கு-கண்; கண்ணன் - கண்களையுடையவன்; ஈண்டு கிருஷ்ணன் அல்ல.

*காயங் கடந்தடி யேனைச் சீரெய்தக் கண்டனையா*
*காயங் கடந்த கதிநல் கிடாதின்னங் கன்றச் செய்யேல்!*
*காயங் கடந்தழை யிக்கனைத் தீத்தசெங் கட்கயலா*
*காயங் கடந்தக் கரிகடஞ் சேர்சென்னைக் காங்கெயனே!*

**(அன்வயம்)** காயங்கள் தந்து அடியேனை இச் சீர் எய்தக் கண்டனை! ஆகாயம் கடந்த கதிநல்கிடாது இன்னம் கன்றச் செய்யேல்! காய்(அங்கு) அடம்தழை இக்கனைக் தீத்த செங்கட்கு அயல் ஆகாய்! அம் கள் தந்தக் கரிக்கடம்சேர் சென்னைக் காங்கெயனே!

**(பதவுரை)** காய் அடம் - சினக்கின்ற செருக்கு, தழை இக்கனை - விஞ்சிய மன் மதனை, தீ(ய்)த்த - எரித்த, செங்கட்கு - சிவனது சிவந்த நெற்றிக் கண்ணுக்கு, அயல் ஆகாய் - அயலில் பிறவாமல் அந்தக் கண்ணிலேயே பிறந்தவனே! அம்,கள் - நீரும் பூக்களின் தேனும், தந்தக்கரி - தந்தங்களை யுடைய யானைகளின், கடம் - மதநீரும், சேர் - (ஆறாகச்) செல்கின்ற, சென்னைக் காங்கெயனே - சென்னையைக் காத்தருள் - கந்தபெருமானே! காயங்கள் - தாவரம் முதலாய பலவகை உடல்களை (பிறவியை)த், தந்து - நெடுங்கால மாகத் தந்து, அடியேனை - என்னை, இச்சீர் - இந்தச் சிறந்த மனிதப் பிறவி, எய்த - அடையும்படி, கண்டனை - செய்தருளினாய்! ஆகாயம் கடந்த - வானுலகைக் கடந்த, கதி - அப்புறத்துலகை இப்பிறப்பி லேயே, நல்கிடாது - தாராமல், இன்னம் - இனிமேலும், கன்றச் செய்யேல் - வருந்தும் படி செய்யாதே!

**(விளக்கம்)** மனிதப்பிறவி சிறந்த தாகலின் 'சீர்' எனப் பட்டது. காய் அடம்=காய்கின்ற பிடிவாதம். அங்கு-அசை; இசை நிறை விற்கு வந்தது.

இக்கன் - இக்கை வில்லாக உடையவன்; இக்கு - கரும்பு கண்ணுக்கு என்பது கட்கு என வந்தது விகாரம், அயல் ஆகாய் என்பது நெற்றிக் கண்ணில் பிறந்த அக்கண்ணுக்கு உறவானாய் என்க; கண் தந்த என்பது கட்டந்த என வரற்பாலது எதுகை நோக்கிக் 'கடந்த' என வந்தது, சேர்தல்-செல்லுதல்; காங்கையன்-கங்கையில் தோன்றியவன்.

*காங்கைய னந்தரத் தார்க்கண் றிசைந்த கனதிறத்தான்*
*காங்கைய னந்தச்செய் தாளன்றென் சென்னைச்சிங் காதனம் சேர்*
*காங்கைய னந்தணற் காய்ந்தா னகத்தெய்தக் கற்கினிழற்*
*காங்கைய னந்த நிதியா தியநரி கான்ற தன்றே!*

**(அன்வயம்)** காங்கையன் அந்தரத் தார்க்கு அன்றிசைந்த கனதிறத்தான்; காங்கை அல்நந்தச் செய்து ஆளான்; தென் சென்னைச் சிங்காதனம் சேர் காங்கையன்; அந்தணற் காய்ந்தான்; அகத்து எய்தக் கற்கின் நிழற்கு ஆம் கை, அனந்த நிதியாதிய நரி கான்றது அன்றே.

**(பதவுரை)** காங்கையம் - காங்கையம் என்னும் தலத்தில் கோயில் கொண்டவன், அந்தரத் தார்க்கு - தேவர்களுக்கு, அன்று - சூரன் வருத்திய போது, இசைந்த - உங்கள் துயர் தீர்ப்பேன் என்று இணங்கிய, கனதிறத்தான் - மிக்க திறமையுடையவன், காங்கை - வெப்பம் (துன்பம்) தருகின்ற, அல் - (இருள்) அறியாமை, நந்த - கெடும்படி, செய் - செய்கின்ற, தாளான் - திருவடிகளை யுடையவன், அந்தணன் - பிரமனை, காய்ந்தான் - ஓங்காரப் பொருள் அறியாத தற்காகத் தண்டித்தவன், தென்சென்ன்னை - அழகிய சென்னையில், சிங்காதனம் - அரியணையில் சேர் - எழுந்தருளியுள்ள, காங்கையன் - கங்கை நதியில் வளர்ந்தவன், அகத்து - மனத்தின் கண், எய்த - எழுந்தருளி யிருப்பதற்கு, கற்கின் - கற்றுக் கொண்டால், நிழற்கு ஆம் கை - பிறவி வெப்பம் ஆற்றும் நிழற்கு இடம் ஆவான், அனந்த நிதி ஆதிய - முடிவில் லாத செல்வம் முதலியன, நரி கான்றது - காட்டுநரி வாந்தியைப் போல் வெறுக்கத் தக்க தாகிவிடும்.

**(விளக்கம்)** காங்கயம் என்பதில் குறிப்பிடும் ஊர், காங்கயம் அல்லது காங்கேய நல்லூர் என்னும் தலங்களைக் குறிக்கும். கனதிறத்தான் எனச் சந்தி ஒற்று இன்றிவந்தது கனம் வடமொழியாதலால்.

அந்தணன் - பிரம்மன்; கங்கை வளர்த்தமையால், கந்தன் காங்கையன் எனப்படுவான்; கை-இடம். அனந்த - முடிவில்லாதது; அழியாதது;

நரி கான்றது - நரி எடுத்த வாந்தியை யாரும் வெறுப்பது போல், கந்தனை மனத்திலிருத்தியவர் அளவற்ற இம்மைச் செல்வத்தை விரும்பாமல் அருவருப்பர், இறுதியில் உள்ள அன்று, ஏ என்பன இசை நிறைக்கவந்த அசைகள்; அதாவது பொருள் இல்லாத இடைச் சொற்கள்.

*கான்ற கழியன்னத் திந்திரன் சீரினைக் கானகம்நெய்க்*
*கான்ற கழி;யன்ன தன்திரி நாட்டம்,சங் கத்திரணன்*
*கான்ற கழியன்னச் செய்ச்சென்னைக் கந்தன் கழலரியாங்*
*கான்ற கழியன்னன் ணாதஞ்சி டேல்அணிக் கன்னிகையே!*

**(அன்வயம்)** கான்ற கழி அன்னத்து இந்திரன் சீரினைக் காண் அகம், நெய்காண் தகழி. அன்ன தன் திரி நாட்டம்.

சங்கத் திரள் நான்கு ஆன்ற கழி அன்னச் செய்ச் சென்னைக் கந்தன் கழல் அரியாம்.

கான் தகு அழி அல் நண்ணாது அஞ்சிடேல்! அணிக் கன்னிகையே!

**(பதவுரை)** இந்திர்ன் சீரினை - இந்திரன் செல்வத்தை, கான்ற - வாந்தியெடுத்த, கழி - கழிபட்ட, அன்னத்து - சோற்றைப் போல, காண் - வெறுக்கின்ற, அகம் - மனமானது, நெய் - நெய் நிரப்பிய, கான் - மணமுள்ள, தகழி - விளக்கு அகலாகும், அன்னதன் - அந்த அகல் விளக்கின், திரி - திரியானது, நாட்டம் - (முருக) தியானம் ஆகும், சங்கத்திரள் - சங்குக் கூட்டம், நன்கு - நன்றாக, ஆன்ற - மிகுதியாக உள்ள, கழி - கழிமுகங்களையும், அன்னம் - அன்னங்களையும் கொண்ட, செய் - வயல்களையுடைய, சென்னை - சென்னையில் வாழும், கந்தன் கழல் - கந்தபெருமானின் திருவடிகள், அரியாம் - திரியில் கொளுத்திய சுடராகும்; ஆதலால், கான் - இவ்வனத்திடம், தகு - இயலுகின்றதும், அழி - அழிவைச் செய்கின்றதும் ஆகிய, அல் - இருளானது, நண்ணாது - நம்மை நெருங்காது, அணி - அணிகலன் அணிந்த, கன்னிகையே - பெண்ணே! அஞ்சிடேல் - இருளுக்கோ திருடர்க்கோ அஞ்ச வேண்டா.

**(விளக்கம்)** அகப்பொருளில் உடன்போக்கில் தலைவியைத் தலைவன் தேற்றல் என்னும் துறையில் அமைந்த பாடல் இது.

உலக இன்பம் வெறுக்கும் வைராக்கிய மனம் அகலாகவும், தியானம் திரியாகவும், கந்தன் கழல் சுடராகவும் உள்ள போது, (அறியாமை) இருள் என்ன செய்யும்?

அணிந்துள்ள அணிகலன்களைத் திருடர் கவர்வரோ என்றும் அஞ்ச வேண்டா!

இந்திரன் செல்வத்தையும் கக்கிய சோறு போல் வெறுக்கும் நமக்கு இந்த அணிகலன் இழக்க நேரிடுமே என்ற அச்சம் இருக்கலாமா?

நீ எதற்கும் அஞ்சாமல் என்னுடன் வருக, என் ஊர் அருகிலேயே உள்ளது என்று அகப்பொருள் தலைவன் தேற்றுகின்றான்.

*கன்னிய ராகத் தியலானன் கேத்தெனைக் காதலெய்தாக்*
*கன்னிய ராகத் தியலாசை யிற்சிக்கக் கண்டனையால்*
*கன்னிய ராகத் தியலாங் கலிக்கட் கலங்கினன், கற்*
*கன்னிய ராகத் தியலாச் செயற்சென்னைக் காட்சியனே!*

**(அன்வயம்)** கன்னி அராகத்து இயலால் நன்கு ஏத்து எ(ன்)னைக் காதல் எய்தாக் கன்னியர் ஆகத்து இயல் ஆசையில் சிக்கக் கண்டனை, ஆல்.

கன்னி அரா, கத்தி ஆல் ஆம் கலிக்கண் கலங்கினன் கல் கன்னியர் ஆகத்து இயலாச் செயற் சென்னைக் காட்சியனே!

**(பதவுரை)** கன்னி - இளமை குன்றாத, அராகத்து - பண்ணோடு கூடிய, இயலால் - இயல்தமிழால், நன்கு - நன்றாக, ஏத்து - துதிசெய்கின்ற, எனை - அடியேனை, காதல் எய்தா - அன்பு காட்டாத, கன்னியர் - குமரிப் பெண்களின், ஆகத்து - உடலில், இயல் ஆசையின் - உண்டான ஆசையில், சிக்க - சிக்கும்படி, கண்டனை - செய்தாய், ஆல் - ஆதலால், கன்னி அரா - இளம் பருவப் பாம்பும், கத்தி - வாளும், அல் ஆம் - பேரிருளும் போல, கலிக்கண் - வறுமையினிடத்து, கலங்கினன் - கலங்கினேன், கல் கன்னியர் - இமய மலையரசன் மகள் பார்வதியும், இமயத்திலிருந்து இறங்கி உலகை வளப்படுத்தும் கங்கா தேவியும் ஆகிய சிவன் மனைவியர் இருவரும், ஆகத்து - மனத்தில் நினைத்தாலும், இயலா - எனக்கருள இயலாத, செயல் - செயலைச் செய்கின்ற (என்னை ஆட்கொண்ட), சென்னை - சென்னையில், காட்சியனே! - காட்சிதருபவனே!

**(விளக்கம்)** நான் காதலித்தாலும் என்னை மனதாரக் காதலிக்காத கன்னியர் உடலில் உண்டாகும் ஆசை வலையில் சிக்கச் செய்தாய்! என்று விரித்துப் பொருள் காண்க! கலி - வறுமை.

**கல்கன்னியர்** - 1. இமயத்தின் மகள் பார்வதி, 2. இமயத்திலிருந்து பாயும் கங்கை.

இருவரும் சிவன் மனைவியர்; பார்வதி சிவன் பாகத்திலும் கங்கை அவன் முடியிலும் இருப்பர், கல்-(இமய) மலை. அவ்விருவரும் நினைத்தாலும் இயலாத செயல், நான் பாவியாய் இருப்பதால் என்னை ஆட்கொள்ள இயலாது அவர்களால்.

அவர்களால் இயலாத அச்செயலைச் செய்பவன் கந்தன்; ஆதலால் அவன் அவ்விரு வரினும் மேலான அருளுடையவன் என்பது சாரம்.

*காட்சிக் கடத்த ரறியாத கந்தன் கதிர்த்தினைச் சீர்க்*
*காட்சிக் கடத்தண் ணிதணாடன் காந்தன்; கதிர் திங்கள்தீக்*
*காட்சிக் கடத்தர்தஞ் சேய்; சென்னை யாளண்ணல் காசடரே*
*காட்சிக் கடத்தத்தர்க் காகானென் னாசைக் கடற்கலனே!*

**(அன்வயம்)** காள்(காள) சிக்கு அடத்தர் அறியாத கந்தன்; கதிர்த்தினைச் சீர்க் காட்சிக் கடத்தண் இதணாள் காந்தன்; கதிர், மதி, தீக் காட்சிக் கடத்தர் சேய்; காசு அடர் ஏக அட்சிக்கு அடு(க்கின்ற) அத்தத்தர்க்கு ஆகான்; சென்னை ஆள் அண்ணல்; என் ஆசைக் கடல் கலன்.

**(பதவுரை)** காள்(காள) - கரிய மனமும், சிக்கு - சிக்கலானபாவமும், அடத்தம் - பிடிவாதமும் உடையவர், அறியாத - அறிய இயலாத, கந்தன் - கந்த பிரான்; கதிர் - கதிர் ஈன்ற, தினை - தினைப் பயிர்களின், சீர்க்காட்சி - சிறந்த காட்சியை யுடைய, கடம் - காட்டிலுள்ள (தினைப்புனம்), தண் இதணாள் - குளிர்ந்த பரண்மேல் இருந்து குருவி யோட்டிய வள்ளியின், காந்தன் - மணவாளன்; கதிர், மதி, தீ - சூரியன், சந்திரன், அக்கினி ஆகிய மூன்றையும் உடைய, காட்சி - கண்களாக உடைய, கடத்தர் - திரு மேனியர் ஆகிய சிவபிரானுக்குச், சேய் - குமாரர்; காசு அடர் - குற்றம் செறிந்த, ஏக அட்சிக்கு - ஒற்றைக் கண்ணன் ஆகிய சுக்கிரனுக்கு, அடு - சேர்க்கின்ற (கூப்புகின்ற) அத்தத் தர்க்கு - கைகளையுடைய அசுரர்களுக்கு, ஆகான் - பகைவன்; சென்னை - சென்னையை, ஆள் அண்ணல் - ஆள்கின்ற தலைவன்; என் ஆசைக்கடல் - என் ஆசைக் கடலைக் கடப்பதற்கு, கலன் - கப்பலாவான்.

**(விளக்கம்)** கருமலையைக் குறிக்கும் காளம் என்பது காள் என வந்தது கடைக்குறை விகாரம், சிக்கு - பாவம். அடம் - பிடிவாதம், கதிர் என்பது (தினைக்) கதிரையும் சூரியனையும் குறிக்க வந்துள்ளது. காட்சி - கண்ணைக் குறித்தது, கடம் - உடம்பு; கடத்தர் - உடம்பினர், காசு - குற்றம், ஏக அட்சி - ஒற்றைக் கண்ணன்.

மாவலி திருமாலுக்கு மூவடிமண் தரும் போது வாமனன், தர்ப்பையால் குத்தியதால் சுக்கிரன் ஒரு கண் இழந்தான்; அது முதல் அவன் ஏக அட்சி (ஒற்றைக் கண்ணன்) ஆனான். அவன் அசுரர்க்கு குரு; அதனால் அசுரர் அவனைக் கைகூப்பி வணங்குவர் என்பதே ஏக அட்சிக்கு அடு(த்த) அத்தத்தர் (கையினர்) என்பதன் பொருள், அவன் அசுரர் குரு ஆதலால் முருகனுக்கு உறவு ஆகான் என்க.

*கடத்தானை யானையர் சீற்றத்திற் சாய்த்த கதிரயில்யாங்*
*கடத்தானை யானையம் செய்யாத தென்னை? கழறு! அசலக்*
*கடத்தானை யானையர் காதி லிசைத்த கதியதனைக்*
*கடத்தானை யானை கிளிதேறக் காண்சென்னைக் கண்ணரசே!*

**(அன்வயம்)** கடத்து ஆனையான் ஐயர் சீற்றத்திற் சாய்த்த கதிர் அயில் யாங்கள் தத்தால் நையா (ந)நயம் செய்யாதது என்னை? கழறு! அசலக் கடத் தானை ஆன் ஐயர் காதில் இசைத்த கதியதனைக் கடத்தான் அயா நை கிளிதேறக் காண் சென்னைக்கண் அரசே!

**(பதவுரை)** அசலக் கடத் தானை - மலையில் வாழும் யானை உரியின் ஆடையும், ஐ ஆன் ஐயர் - அழகிய விடை வாகனமும் உடைய சிவபிரான், காதில் இசைத்த - காதில் உபதேசித்த, கதியதனை - முத்திபெறும் வழியை, கடத்தான் - குடத்தில் பிறந்த அகத்தியனும், அயாநை - துன்பத்தால் நைந்த, கிளி - கிளி உருவான அருணகிரியாரும், தேற - தெளியும் படி, காண் - கண்ட(உபதேசித்த) சென்னைக் கண் - சென்னையில் வாழும், அரசே! - தலைவனே! கடத்து ஆனையான் - மதம் பொழிகின்ற ஐராவத யானையையுடைய இந்திரன், அயர் - சோர்வுற்ற, சீற்றத்தில் - சூரனின் சீற்றத்திலிருந்து உயிர் வாழ் வதற்காக, சாய்த்த - சூரனைக் கொன்ற, கதிர் அயில் - ஒளி மிக்க வேலானது, யாங்கள் - அடியேங்கள், தத்தால் - ஆபத்தினால், நையாநயம் - நையாத நன்மையை, செய்யாதது என்னை - செய்யாதது ஏன்? கழறு - சொல்லுவாயாக!

**(விளக்கம்)** அயர் என்பது எதுகை நோக்கி ஐயர் என வந்தது. நயம் என்பது நையம் என வந்ததும் அது. கடம் - மதம்; அது யானைத் தோலுக்கு ஆகுபெயர் ஆயிற்று, கதி - முத்திநெறி, கடம் - குடம், குடத்திற் பிறந்தவன் குடமுனி அகத்தியன், அயா - துன்பம், கிளி - அருணகிரிநாதர். காண் உபதேசித்த என்ற பொருளில் வந்தது. அயா என்பது ஐயா என வந்ததும் எதுகை நோக்கி.

*கண்ணித் தியானித் தடியரைச் சேர்ந்திலேன்; கற்றகிலக்*
*கண்ணித் தியானித்தந் தேர்கிலன், காக்கக் கடன்றள்ளிடேல்*
*கண்ணித் தியானித் தரைக்கிதந் தேடிடக் கண்டதென்னின்*
*கண்ணித் தியானித்தர் தாழ்சென்னைச் சேந்த! கடினத்ததே!*

**(அன்வயம்)** கண்ணித் தியானத்து அடியரைச் சேர்கிலன்; கற்று அகிலக் கண் நித்திய அணித்தம் தேர்கிலன். காக்கக்கடன் தள்ளிடேல்!
கண் இத்தி யான் இத் தரைக்கு இதம் தேடிடக் கண்டது என்? நின் கண் இத்தி ஆன் நித்தர் தாழ் சென்னைச் சேந்த!

**(பதவுரை)** ஆன் நித்தர் - விடைவாகனச் சிவபிரானும், தாழ் - வணங்கத் தக்க, சென்னைச் சேந்த - சென்னையின் கண் வாழ் கந்தனே! நின் கண் - உன்திருவிழிகள் தந்த, இத் - இந்த, தி - அறிவு, கடினத்தது - மிக மிக அரியது, கண் இத்தி - கணுக்களை யுடைய இத்தி மரம் போன்று பயனில்லாதவன், யான் - நான், இத்தரைக்கு - இவ்வுலகுக்கு, இதம் தேடிட - நன்மை - செய்யும்படி, கண்டது என் - செய்தது ஏன்? கண்ணி - உன்னை எண்ணி, தியானித்து - தியானம் செய்து, அடியரை - உன் அடியாரோடு, சேர்கிலன் - சேர்ந்தறியேன், கற்று - கற்பவை கற்று, அகிலக் கண் - உலகினிடத்து, நித்தியம் அநித்தம் - அழியாதது இது அழிவது என்று, தேர்கிலன் - பகுத்தறியேன், காக்க கடன் - இத்தகைய என்னைக் காப்பது நின்கடன், தள்ளிடேல் - என்னைக் கைவிட்டு விடாதே!

**(விளக்கம்)** நித்தியம் - அழிவில்லாத; அநித்தியம் எனபது அநித்தம் என மருவியது, இத்தி - பயன்படாத ஒரு வகை மரம் வடமொழியில் 'தீ' என்ற சொல் அறிவைக் குறிக்கும். அது இங்குக் குறுகித் 'தி' என நின்றது.
'தீ' பத்தி ஆதி குணார்ணவம்' என்ற சுலோகப் பகுதியில் 'தீ' அறிவு என்ற பொருளில் வந்துள்ளது.
'நின்கண் இத் தீ' என்பது நின் கண்கள்(தந்த) இத் 'தி' என்று விரிக்க வேண்டும்.

*கடியக் கடியதைச் செய்யக்கெட் டாரிற் கனக நச்சிக்*
*கடியக் கடியக்கை யேற்றலை யாதெனைக் காத்தி! யராக்*
*கடியக் கடியல்கண் ணாரரடற் சென்னையிற் கந்த! நல்க*
*கடியக் கடியார்க் கெளியா யெண் தீர்தந்த கல்லினனே!*

**(அன்வயம்)** கடியக் கடியதைச் செய்யக் கெட்டாரிற் கனகம் நச்சிக் கடியக் கை ஏற்று அலையாது எ(ன்)னைக் காத்தி! அராக் கடி, கடிஅல் கண்ணார் ஆடற் சென்னையிற் கந்த! நல்கு! அகடு இயக்கு அடியார்க்கு எளியாய்! என் தீர் தந்த கல்லினனே!

**(பதவுரை)** அராக்கடி - பாம்பின் படம் போன்ற அல்குலும், கடி அல் - அழகு தரும் இருள் போன்ற, கண்ணார் - கரிய கண்களையுடைய காரிகையர், ஆடல் - நடனம் ஆடுகின்ற, சென்னையிற் கந்த - சென்னையில் வாழ் கந்தனே! நல்கு - உலகுக்கு நன்மை தருகின்ற, அகடு - நடுநிலையில், இயக்கு - செலுத்துகின்ற அடியார்க்கு - தொண்டர்கட்கு, எளியாய் - எளிதில் அருள்பவனே! எண்தீர்ந்த - அளவு முற்றும் கடந்த, கல்லினனே - குன்றுகளில் வாழ்பவனே! கடிய - விரைந்து முற்பிறவியில், கடியதை - கடிய தீவினை, செய்ய - செய்தலால், கெட்டார் - கொடியவரின், இல் - வீடுதோறும், கனகம் - அவர்தரும் செல்வத்தை, நச்சி - விரும்பி, கடியக்கடிய - அவர்கள் சினந்து சினந்து விரட்டினாலும், கையேற்று - கையால் யாசித்து, அலையாது - அலைய விடாமல், எ(ன்)னைக் காத்தி - அடியேனைக் காப்பாற்று!

**(விளக்கம்)** கடி - கடிதடம், கடி - அழகு, நன்மை தருகின்ற நடு நிலையில் செலுத்துகின்ற அடியார் என்று கொள்க. எண் தீர்தந்த - எண் தீர்ந்த (அளவில்லாத) தீர்ந்த என்பது தனிப்பொருள் தாராத துணைவினை.

*கல்லனந் தத்தை யடலாழி யைச்செறி கையனினீள்*
*கல்லனந் தத்தைய சென்னையி லாடல்செய் கந்தநயங்*
*கல்லனந் தத்தை யறையியங் கேட்டிலை காரிகையேங்*
*கல்லனந் தத்தைய லாரிக லாகிடக் கண்டதன்றே.*

**(அன்வயம்)** கல்லல் நந்தத்தை அடல் ஆழியைச் செறி கையனில் நீள் கல் அனந்தத்து ஐ! சென்னையில் ஆடல்செய் கந்த! நயம்கல் அ(ன்)னம் தத்தை அறை இயம் கேட்டிலை! காரிகை ஏங்கல் அ(ன்)னம் தத்து அயலார் இகல் ஆகிடக் கண்டது.

**(பதவுரை)** கல்லல் - ஓசையுடைய, நந்தத்தை - சங்காயுதமும், அடல் ஆழியை - வலிய சக்கராயுதமும், செறி - ஏந்தியுள்ள, கையனில் - கைகளை யுடைய திருமால் உலகு அளக்க நீண்டதுபோல், நீள் கல் - நீண்டுள்ள மலைகள், அனந்தத்து - எண்ணிலாத வற்றுக்குத், ஐ - தலைவனே! சென்னையில் - சென்னை நகரில் ஆடல் செய் கந்த! - திருவிளையாடல் செய்கின்ற கந்தனே! நயம்கல் - நல்லதைக் கற்ற, அ(ன்)னம் - அன்னமும், தத்தை - கிளியும் உன்னிடம் தூதாக வந்து, அறை இயம் - பறை அறை வது போல் பேசிய உரத்த குரலையும், கேட்டிலை - நீ கேட்டாயில்லை, காரிகை - உன் மீது காதல் கொண்ட இத்தலைவி, ஏங்கல் - ஏங்குவது, அ(ன்)னம் - சோறு, தத்து - துன்பம் தருவதாகவும், அயலார் - சுற்றத் தாராகிய ஊரார், இகல் ஆகிட - பகையாகவும், கண்டது - செய்து விட்டது.

**(விளக்கம்)** "கந்தனே! உன்மேல் காதல் கொண்ட தலைவி, அன்னம் கிளிகளைத் தூது விட்டும் பயனின்றிப் போனது. உண்ணும் சோறும் வருத்து கின்றது. ஊராரும் ஏளனம் செய்கின்றனர். இவற்றுக்குக் காரணம் அவன் உன்னைச் சேராத ஏக்கந்தான்" என்று தோழி கந்தனிடம் கூறுவதாக அமைந்த அகப்பொருள் பாடல், அன்று, ஏ என்பன அசைகள்.

காரிகை ஏங்கல், அன்னம் தத்து ஆகவும் அயலார் இகலாகவும் செய்தது என்று செவ்வே பொருள் கொள்க!

*கண்டத் தகண்ட நிலைகாட்டி ஆண்டனை! கற்றறி, நி*
*கண்டத் தகண்டரிற் றட்டழிந் தேன்கடல் கட்டகிலக்*
*கண்டத் தகண்டகர்ச் செற்றணி யார்தரக் காத்தி செஞ்சி*
*கண்டத் தகண்டத் தலைச்சென்னை யாயயிற் கையினனே!*

**(அன்வயம்)** கண்டத்து அகண்ட நிலைகாட்டி ஆண்டனை! கற்று அறி நிகண்டு அத்த! கண்டரில் தட்டழிந்தேன். கடல்கட்டு அகிலக் கண்டத்த! கண்டகர்ச் செற்று அணி ஆர்தரக் காத்தி! செஞ் சிகண்டத்த! கண்டத்தலைச் சென்னை யாய்! அயில் கையினனே!

**(பதவுரை)** செம் - செவ்விய (அழகிய), சிகண்டத்த - மயில் வாகனேனே! கண்டத்தலை - நிலவும் பிரிவுகளும் சிறந்ததாகிய, சென்னையாய் - சென்னையில் வாழ் கந்தனே! அயில் கையனே! - வேலைக் கையில் கொண்டவனே! கண்டத்து - உலகிலுள்ள தனித்தனிப் பொருள்களிடத்தும், அகண்ட நிலை - பிரிவு படாத ஒன்றான பரம்பொருளின் நிலையைக் காட்டி, ஆண்டனை - அடியாரை

ஆட்கொண்டாய்! கற்று அளி - நிகண்டு குறிப்பிடும் சொற்களுக்குப் பொருளாக உள்ளவனே, கண்டரில் - கள்ளிபோல் துன்புறுத்தும் கொடியரால், தட்டழிந் தேன் - நிலை குலைந்தேன், கடல்கட்டு - கடலை உடையாகக் கட்டுகின்ற, அகிலக் கண்டத்த - உலகாகிய நவகண்டங்களுக்கும் தலைவனே! கண்டகர்ச் செற்று - கொடியவர்களை அழித்து, அளி - நின்கருணை, ஆர்தர - என்பால் நிரம்பும்படி, காத்தி - காப்பாயாக!

**(விளக்கம்)** கண்டம் - தனித்தனி உருவங்கள், அண்டம்- பிளவு படாமல் ஏகமாய் இருக்கும் பிரம்மம். (நிகண்டு) அத்த- அர்த்தம் என்ற வடசொல் தமிழில் அத்தம் என வந்தது. கண்டர் - கள்ளியைப்போல் துன்புறுத்தும் கீழோர், கண்டத்த - கண்டங்களை உடையவனே! சிகண்டம் - மயில் தோகை; ஆகுபெயராய் மயிலைக் குறித்தது; கண்டத்தலை - நிலப்பகுதியில் தலைமையானது.

*கையி லயிலணித் தாகுடக் காளையிற் காணிறைதன்*
*கையி லயிலணிக் கந்த கிரியிற் கடையினிற்சேர்*
*கையி லயிலணிக் தாட்கதி நன்றெனக் காட்டினன்செங்*
*கையி லயிலணி கந்தன்சென் னைத்தனிக் காரணனே!*

**(பதவுரை)** கை இல் அய் - சிறுமை இல்லாத அழகிய, இல் - மனைவி யாகிய உமாதேவி, அணித்தாகிட - அருகில் இருக்க, காளையில் - இடப வாகனத்தில், காண் - காணப்படுகின்ற இறை தன் - சிவபெருமானது, கயிலையில் - கயிலையில் (சிவலோகத்தில்), அணி - அழகிய, கந்தகிரியில் - கந்த மாதன கிரியாகிய கந்த லோகத்தில், கடையினில் - அந்திம காலத்தில் (மரணத் திற்குப் பின்பு), சேர்கையில் - சேர்வதைக் காட்டிலும், அயில் அணி - அழகிய தண்டை சிலம்பு முதலிய அணிகலன் அணிந்த, தாள் கதி - தன்(கந்தன்) திருவடிகளாகிய பரகதியில் (முத்தியில்), நன்று என - மேலானது என்று, காட்டினன் - அறிவித்தான், செங்கையில் - சிவந்த திருக்கரத்தில், அயில் அணி - வேல் அணிந்த, கந்தன் - கந்தன் (ஒருவனே) சென்னை தனிக் காரணன் - சென்னையிலுள்ள ஒப்பற்ற பரம்பொருள்.

**(விளக்கம்)** அயில் என்பதற்கு அழகு என்றும் பொருள் உண்டு. சிவலோகத்தைக் காட்டிலும், கந்தலோகத்தைக் காட்டிலும் கந்தன் திருவடிகளில் ஐக்கிய மாவது (ஒன்றிப்பது) மேலானது என்று கந்தனே உணர்த்தினான்.

காரணன் நன்று எனக் காட்டினன் என்று கூட்டுக. அழகைக் குறிக்கும் 'ஐ' என்பது 'அய்' என எதுகை நோக்கிப் போலியாக வந்தது. அது அய்+இல் அயில் என விதிப்படிப் புணர்ந்துள்ளது.

---

# திருப்பணிகள்

1. இத்திருக்கோயில் சார்பில் ஸ்ரீ முத்துக்குமாரசுவாமி தேவஸ்தான P. வேணுகோபால் செட்டியார் மேல்நிலைப்பள்ளி, சென்னை-112.

2. ஸ்ரீ முத்துக்குமார சுவாமி தேவஸ்தான இந்து மேல்நிலைப்பள்ளி, சென்னை 3.

3. ஸ்ரீ முத்துக்குமாரசுவாமி தேவஸ்தானம் கண்ணபிரான் பத்மாவதி தொடக்கப் பள்ளி, ஓட்டேரி, சென்னை - 600 012.

4. ஸ்ரீ முத்துக்குமாரசுவாமி கலைக் கல்லூரி, சென்னை-112

5. கந்தகோட்டம் இலவச மருத்துவமனை (கந்தரலங்கார மண்டபத்தில்) 156, இராசப்பச செட்டி தெரு, சென்னை-3

6. இதனொடு 175, தம்பு செட்டி தெருவில் திருமதி. சாமுண்டீஸ்வரி அம்மாள் பெயரால் இலவச மருத்துவமனையும், இத்திருக்கோயில் சார்பில் கந்தகோட்ட கலாலயம் வீணை வகுப்பும், பரதநாட்டியப் பயிற்சியும் சிறப்பாக நடைபெற்று வருகின்றன.

இத்திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ மூலவர் வள்ளி தெய்வானை சமேத மூல விக்ரகங்களுக்குப் பொன்னாலான கவசங்கள் செய்து அணிவிக்கும் திருப்பணியினை மேற்கொள்ளப் -பட்டுள்ளது; மேலும் தங்கத்தில் ஆன காவடி ஒன்றும் செய்விக்கும் பணியும் மேற்கொள்ளப்பட்டுள்ளது.

நடைபெற்றுக் கொண்டிருக்கும் மற்றும் நடைபெறற இருக்கும் திருப்பணிகளுக்கு நன்கொடை வழங்க அன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

இங்ஙனம்,

*பி.பாலசுப்பிரமணியம்*, பி.எஸ்ஸி.,
சீனியர் அறங்காவலர்

ஜி. ஏகாம்பரம் செட்டியார்,

சி. ஆர். பழனிதாஸ்,
டி எஸ். பாலசுந்தரம்,எக்ஸ்.எம்.சி.,
பி.எல்.டி. ஏழுமலை
அறங்காவலர்கள்



ஸ்ரீ முத்துக்குமாரஸ்வாமி
(உற்சவர்)

